கழுதை அழுத கதை

முதல் பதிப்பு : தி.பி. 2030, ஆடவை : 6 (20-6-1999)

நூல் தலைப்பு : கழுதை அழுத கதை
(புதுவகைப் பாவியம்)

ஆசிரியர் : பாவலரேறு பெருஞ்சித்திரனார்

வெளியீடு : தென்மொழி நூல்வெளியீட்டு
விற்பனையகம்,
செந்தமிழ் அடுக்ககம்,
(சி.கே. அடுக்ககம்)
மேடவாக்கம் கூட்டுச்சாலை,
மேடவாக்கம்,
சென்னை - 601 302.
தொலைபேசி : 239 0231

அச்சாக்கம் : தென்மொழி அச்சகம்,
சென்னை - 601 302.



தாள் : வெள்ளைத் தாள் (11.6)

பக்கங்கள் : 224 (40+184)

அளவு : மணிமுடி (கிரௌன்)

படிகள் : 1200

விலை : உரு. 35.00

## பதிப்புரை

பாவலரேறு ஐயா அவர்கள் இயற்றிய 'கழுதை அழுத கதை' என்னும் இப் புதுவகைப் பாவியம் சிறுவர் மாதிகையான 'தமிழ்ச்சிட்டு' இதழில், தி.பி. 1999 சுறவ இதழான அதன் குரல் : 2; இசை : 6இல் தொடங்கப் பெற்று, இடையறவு பட்டும் தொடர்ந்தும் நாற்பது தொடராக நீண்டு தி.பி. 2017 கடக இதழான அதன் குரல் : 17; இசை : 12இல் — பதினெட்டு ஆண்டுகளுக்குப்பின் (1968-86) முற்றுப் பெற்றது.

கதையமைப்பைப் பொறுத்து இப் பாவியம், முப்பது இயல்களாகப் பாகுபடுத்தப் பெற்றிருப்பினும், இஃது ஓராயிரத்து எண்ணூற்று அறுபத்திரண்டு அடிகளைக் கொண்ட ஒரே இன்னிசைக் கலிவெண்பாவாகும். தமிழிலக்கியப் பரப்பிலேயே இதுகாறும் புனையப் பெற்றுள்ள இவ்வகைப் பாவில் நெடுமையான் மிக்கது இதுவேயாகும்.

இதழ்கள் – நூல்கள் வெளியீடு, அயல்நாட்டுச் செலவுகள், இயக்கப் பணிகள், சொற்பொழிவு நிகழ்ச்சிகள், அரசியற் போராட்டங்கள், சிறைவாழ்க்கை, பொருளியற் சிக்கல்கள் முதலான பல்வேறு இடையீடுகளுக்கும் தடைப்பாடுகளுக்கு மிடையில் அவ்வப்போது சிறிது நேரத்தை ஒதுக்கி ஐயா அவர்கள் இப் பாவியத்தை நிறைவு செய்திருக்கிறார்கள். இருப்பினும் இதன் யாப்பமைதியிலும் கதைப்போக்கிலும் எவ்வகைச் சிக்கல்களுமின்றி இது யாற்றொழுக்காக இனிதமைந்திருப்பது ஆசிரியரின் பாவன்மையையும் படைப்பாற்றலையும் புலப்படுத்தும்.

போர்க்களத்தே எதிரிகளைக் கண்டு அடலுறத் தாக்கும் ஆற்றல் சான்ற பெருங்களிறு, வேறு பொழுதில் சிறுவர்களை விளையாட்டுக் காட்டி மகிழ்விப்பது போல், நூறாசிரியம் போலும் விழுமிய செய்யுள்களைப் படைத்த பாவலரேறு அவர்கள் இளைஞர்கள் இன்றமிழில் திளைக்குமாறு தாம் எளிவந்து இப்பாவியத்தைப் படைத்திருக்கிறார்கள்.

இது, உருவகப் பாட்டு - உருவகக் கதை என்று குறிக்கப் பெற்றிருப்பதால், பொதுவாக விலங்குகளிடம் காணப்படும் சில சிறந்த குணங்கள், மக்கள் சிலரிடம் மிகுந்திருப்பதாகக் கருதப்படுவதால் அத்தகைய மக்களை அவ் விலங்குகளாகவே உருவகஞ் செய்திருப்பதாகவும், ஆசிரியர் தாம் கட்டமைக்கக் கருதும் புதிய குமுகாய அமைப்பை இக் கதையாகப் புனைந்திருப்பதாகவும் கொள்ளப்படும். அவ்வாறன்றி உருவகம் பற்றி வேறு விளக்கம் ஏதும் புலப்படவில்லை.

இனி, ஐயா அவர்கள், எழிலார்ந்த ஓவியங்களுடனும் பொலிவான தோற்றத்துடனும் நூலாக வெளியிட வேண்டும் என்று கருதியே, இப் பாவியத்தொடர் முற்றுப்பெற்ற பின்னும் அமைந்திருந்தார்கள். ஆனால் அவர்கள் வாணாளில் இந் நூல் வெளிவரும் வாய்ப்பு இல்லாமற் போனது.

தென்மொழிக்கும் ஐயா அவர்களின் 'ஐயை' உள்ளிட்ட நூல்கள் சிலவற்றுக்கும் ஓவியந் தீட்டியவரும் அவர்களது நல்லன்பைப் பெற்றவருமான ஓவியர் சின்னையன் அவர்களின் ஓவியங்களைத் தாங்கி இப்போது இக் கழுதை அழுத கதை வெளிவருகின்றது.

தமிழ்ப் பல்கலைக் கழகத் தூயதமிழ் அகர முதலிகள் துறைத் தலைவரும் சொல்லாய்வு அறிஞருமான அருளியார் அவர்கள் இந்நூலுக்குக் 'கதைக்கு முன் கதைப்பு' எனும் விரிவான அணிந்துரை வழங்கியுள்ளார்கள்.

இந்நூலை உண்மைத் தமிழ்நெஞ்சங்கள் உவந்து வரவேற்கும் என்று நம்புகின்றோம்.

**— தென்மொழி நூல் வெளியீட்டகத்தினர்.**

# கதைக்கு — முன் கதைப்பு

ப. அருளி
*ஆய்வறிஞர்/தலைவர்*
*தூயதமிழ் — சொல்லாக்க அகரமுதலிகள் துறை*
*தமிழ்ப் பல்கலைக்கழகம்*
*தஞ்சாவூர் – 5*

*தமிழ்க் குமுக இளையோரின் அறிவுத் தெளிவுக் கெனத் "தமிழ்ச்சிட்டு" "தென்மொழி" ஆகிய இதழ்களில் நம் ஐயா அவர்கள் எழுதிவந்த முப்பத்தொன்பது ஆசிரியவுரைகளின் தொகுதியான "இளமை விடியல்" (1995) என்னும் நூலின் படையற்பகுதியில் — தம் தாய்க்கென யாத்துப் படைத்த வாழ்த்துநிலை வெண்பா, இது!........*

**"பெற்றெடுத்து மோந்து பெயரிட்டுப் பேணிநின்று
கற்றறிந்தார் போற்றுமுயர் கல்விதந்து — உற்றதந்தை
போனபின்னும் என்னைப் புரந்தஅன்னை குஞ்சம்மாள்
வானநினை விற்(கு)இதுவோர் வாழ்த்து"**

*இப் பாவின் முதலடியின் இரண்டாஞ்சீராக வரும் "மோந்து" எனும் எச்சச் சொல்லாட்சியுள் கிடக்கும் தாய்மைவினை தோய்ந்த பாரிய — இனிய — அரிய பாசக் காட்சியுள் — நம் பாவலரேறு ஐயா அவர்களின் துய்ப்புணர்வையும் (நுகர்வு விருப்பு உணர்வையும்), குழந்தைகளிடம் இயல்பாக அவர்க்கமைந்திருந்த குளிர்மையார்ந்த நேசவுணர்வு செறிந்த மனக் களனையும், — உணர்வினார் உணரவியலும்!.....*

*"குழந்தை!....." எனும் தலைப்பில் 1972-இல், நம்*

ஐயா அவர்கள் தாம் எழுதிய பாட்டொன்றில் — குழந்தையொன்றன் தோற்றம் இயல்பாக ஏற்படுத்தும் இன்பக் கிளர்ச்சியையும் உவகையெழுச்சியையும் விளக்கி வியப்புற்றவாறே — இறுதிப் பகுதியில் இவ்வாறு முடிப்பார்!..... அப் பாப்பகுதி இது!......

**"பொக்கைவாய்ப் பூமணத்தை மோந்து மோந்து**
**பூச்செண்டு மேனியின்மேல் முகத்தால் நீந்திச்**
**சொக்கும்உளம்! சொக்கும் உயிர்! சுழலும் எண்ணம்!**
**சொல்லழியும்; நினைவழியும்! சொந்தம் மாயும்!"**

[குழந்தையொன்றைத் தழுவியணைத்து அதன் பற்களிலிலாத வாயுள் மீமெல்லிதாகக் கமழ்கமழ்க்கும் பூநறுமணத்தைத் திரும்பத் திரும்ப மோந்தவாறு — அம் முகத்தோடு நம் முகத்தைப் பொருந்தவைத்து நீந்திக் கிடக்கும்போது உள்ளமும் சொக்கிக் கிடக்கும்; உயிரும் சொக்கி மூழ்கும்! எவ் எண்ணமும் ஒருநிலைப் படாது சுழன்று கொண்டிருக்கும்! சொல் என்ற ஒன்றே அங்கிருக்காது — அது அழிந்தே போகும்! நினைவு — கினைவு எவையும் அங்கிரா! யாவும் அழிவன ஆகும்! சொந்தம் — பந்தம் என்றவாறான நிலைகளெல்லாம் ஒட்டுமொத்தமாக மாய்ந்து நின்றுவிடுகின்ற ஒன்றிய ஓர் எல்லையற்ற பேரின்பநிலை மட்டுமே ஆங்கு இருக்கும்!.....]

நம் ஐயா அவர்களின் இத்தகைய வெளிப்பாட்டுப் போங்கில் குழந்தைகள் மீதான அவரின் பாசநேசப் பாரிய வுணர்ச்சிகளின் எல்லையற்ற இயல்புத் தோய்வை ஓர் எளிய உணர்வாளனும் தெளிதாய் உணருவான்!

இத் தகு இயல்பு உணர்வுக்குச் சொந்தக்காரரான நம் பாவலரேறு ஐயா அவர்கள், நந்தமிழ்க் குழந்தைகளுக்

கென — சிறார் சிறுமியர்க்கென — இளைஞர்க்கெனப் படைத்தளித்துள்ள கவின்கவ்விய கதைப்பாவியம், இது! அத்துடன் —கல்விவல்ல பெரியோரும் சுவைத்து மகிழும் வகையிலுமாக மிக நுண்ணுட்பமாக ஆக்கப் பெற்றுள்ளது. [இக் கதை, சிறியோரும் பெரியோருமாகப் படிக்க வேண்டிய ஓர் உருவகக் கதை—என்றவாறு நம் ஆசிரியர் [தமிழ்ச்சிட்டு இதழில் — தொடர்நிலைப் பாவியமாக வெளிப்படுத்திய பொழுது—] அடிக் குறிப்பொன்றில் பதித்துள்ளமை ஈண்டு எண்ணத் தக்கது. அக் குறிப்பு வரியுள்—சிறியோரை முன்னும் — பெரியோரை அடுத்தும் அடுக்கியிருக்கும் பாங்கும் உடன் ஒப்பக் கருதத்தக்கது!]

திண்மையும் ஒண்மையும் நுண்மையும் செறிவுறு மாறு தேர்ந்தெடுத்த தெள்ளிய தொன்சொற்களால் அறிவு நுட்ப நுழைபுலத்தாரையும் திணற அடிக்கவல்ல அருந் திறஞ்சான்ற நம் பாவலரேறு ஐயா அவர்கள் — இப் புனைவு இலக்கியத்துக்குரிய துய்ப்புத் தோய்வாளியரான சின்னஞ்சிறிய நந்தமிழ்ப் பிஞ்சினரின் நுகர்வுத் திறனுக்கேற்றவாறான மிக்கெளிய தெள்ளிய கட்டமைப் பொழுங்கில் இதனைச் சமைத்திருக்கும் பாங்கு — மீமெல்லிய எழில் அமைவுடையது!

“பறக்கின்ற பறவை கால்களால் நடப்பதைப் போல....” என்றவாறு பாட்டுணர்வு என்னுந் தலைப்பில் (கற்பனை ஊற்று : பக்கம் : 92) ஓர் அருமையார்ந்த உவமை கூறிய ஐயா அவர்கள் — அக் கருத்துக்குத் தாமே உவமையராகித் தம்மின் பாப்பறப்பு வன்திறச் சிறகுகளை நனியொடுக்கிக் கொண்டு இப் படைப்புக் களத்திடையே எண்மை நடையியன்றிருக்கும் அழகு — தனீஇச் சிறப்பு வாய்ந்தது!

எனினும், — மெல்லிய நடையூடாக — வல்லிய அவரின் பாத்திறச் சிறகடிப்பு சில்லிடங்களில் இயல்பா யெழுவதையும் — அவ்வவ்விடங்களுக்குரிய தகைமை வாய்ந்த அருஞ்சொற்கள் இடையில் அணிவேய்ந் திருக்கும் நிலையையும் — அவற்றை அவராலேயே தவிர்க்கவியலாமற் போயுள்ளமையையும் நாம் காண வியல்கின்றது! இவற்றைத் தொடக்க நடையிடையிலேயே தெளிவாகவுணர்ந்து – இப் பாவியத் தொடர்ச்சி 3-இன் இறுதிப் பகுதியினடியில்,

"இதில் சிறுவர்களுக்குப் புரியாத சில சொற்கள் வந்திருப்பின் பெரியோர்களும் ஆசிரியர்களும் அவற்றை நன்கு படித்துக் காட்டி விளக்க வேண்டுகின்றோம்!"..... என்றவாறு ஐயா அவர்கள் அக்கால் பதித்து வைத் துள்ளமையிலும் புலனாகின்றது!

**கதைக் கருவைச் சூழ்ந்துள்ள புறவலை!....**

ஒரு பொங்கல் நாள்!.... அந் நன்னாட் காலையில் பொங்கல் அருந்தியபின் ஆற்றங்கரைக்குக் காற்றாடச் செல்கின்றார், இவ் இலக்கிய ஆசிரியர்! ஆற்றங்கரைப் பாங்கில் காற்று வீசிக் கொண்டிருக்கின்றது! அப்பொழுது, தாயும் மகளுமான இரு பெட்டைக் கழுதைகள் ஆங்கு வாயவிழ்த்துக் கத்திக் கொண்டிருக்கின்றன!

இயல்பாகக் கத்தும் அவற்றின் கடுங் கரகரப்பார்ந்த இழுப்புவாங்கும் குரல்கள் கேட்சியின்வழி — அவை தமக்குள் ஏதோ ஒரு துயரவுணர்வைப் பரிமாறிக் கொள்ளும் காட்சியாகவே — அழுது புலம்பி வருந்தி அவற்றுக்குள் ஏதோ செய்தி சொல்லிக் கொள்ளும் காட்சியாகவே இவர்க்குப் படுகின்றது!.... இவர் மனமும்

அவ் அவலக் கரட்டுக் குரலொலிகளைக் கேட்டு வருத்தமுறுகின்றது!..... அதில் ஒன்றி நிற்கின்றார்!......

அவற்றைப் பார்த்துக்கொண்டும் — அக் குரற் பொருள்களை உன்னிக்கொண்டும் இருக்கையில் — ஆற்றங்கரைக் காற்றின் மெல்லிய இன்வீச்சு, ஆசிரியரைப் படிப்படியே கண்பாடு கொள்ளச் செய்துவிடுகின்றது!...... ஆழ்ந்த அயர்ந்த அருமையான உறக்கம் ஆங்கு ஆட்படுகின்றது!.....

அக் கண்துஞ்சலுக்குள் — கனவின் மூடி விரிந்து காட்சிகளாகத் திரைப்பாடு கொள்கின்றன! அக் கனவில், இவ் ஆசான் கண்ட காட்சிகளின் தொடர்ச்சித் தொகுப்பே "கழுதை அழுத கதை" என்னும் பாவிய இலக்கிய எழுத்தோவியமாகி — நம் முன் பார்வைக்கும் ஓர்வுக்குமாக நேர்வைக்கப் பெற்றுள்ளது!

காலைப் போதில் கண்ணயர்வு...... இடைவெளி யிலாத ஆழ்ந்த துயில்...... அரைக் கிழமான தாய்க் கழுதை உரைக்கத்தலில் தொடக்கமாகிய கனவுலக உலா மிதப்பு!..... கனவு மிதப்பின் அறுதியாகிய இறுதியில்.....அத் தாய்க் கழுதையின் ஓரே மகளாகிய சேய்க் கழுதையின் விசும்பல் விசிப்பொலியிழுப்பானது — இழுத்துக் கவ்விக் கொண்டிருந்த அவரின் நெட்டுறக்கத்தைக் கலைத்து விழிப்புக்கு வித்திட்டு உசுப்பிவிடுகின்றது! ஆசிரியரின் கண்ணிமை விதை மூடிகள் விளர்கின்றன!.... முழு.... விழிப்பு!.... காலைப் போழ்தோ — இப்போது மாலைப் போழ்து! ஒலிகளும் ஆங்கு இல!... ஒப்பாரியோல வுரிமைக் கழுதைகள் இரண்டும் ஆங்கு இல!.... சுற்றும் முற்றும் சுலாவலான பார்வை வீச்சோடு ஆசிரியர் அலமருகின்றார்!....

அருமையான கொள்கைக் காட்சியைக் கனவில் நின்று இயங்கிக் காட்டிய அக் கழுதைகளைக் காண அங்கும் இங்குமாக அலைகின்றார்!..... அந்தோ, ஓ! ஓ!...... ஒரு புதர்ப் பக்கத்தில் அவையிரண்டும் பின்னிப் பிணைந்தவாறு பிணமாய்க் கிடக்கின்றன!...... அவரின் விழிகளில் ஈரம்!.....

இப் புறவலைக்குள்தான் — இக் கதையுறுப்பினர்களின் ஆட்டங்கள் பாட்டங்கள் — கூட்டங்கள் — நோட்டங்கள் — ஊட்டங்கள் வாய்ந்த உருப்படிகள் செறிந்த பல்வேறு குமுகச் சிந்தனைத் தேட்டங்கள்!...... என மிகப் பலவான கருத்திழைகளின் ஊடோட்டங்களாலாகிய அருமையான பின்னற்புனைவு உட்பொதிந்து வைக்கப்பெற்றுள்ளது!.....

**கதைத் தொடர்ச்சியின் ஈற்றில் — புதினம் போன்ற விறுவிறுப்பு!....**

கதை சொல்லுதற்கேற்ற எளிமைவாய்ந்த பா நடையிலமைக்கப்பெற்றுள்ள இவ் இலக்கியம் தொடர்நிலைப் பாவியமாகத் தொடர்கையில் — கதையை, அடுத்து ஆவலொடு எதிர்பார்த்துக் காத்துக் கொண்டிருக்கும் வண்ணமாக — ஒவ்வொரு தொடரின் இறுதியையும் புதினம் போன்ற விறுவிறுப்பு அமைப்பில் ஆசிரியர் கட்டமைத்து வழங்கிவந்தமை இவ்விடத்தில் குறிக்கத் தக்கதாகும்.

1. "முட்டி நனையா முழங்கால்நீர் ஓட்டத்தில்
   பெட்டைக் கழுதை பிழைத்திருக்கக் கண்டதுவே!"
   *(811-812)*

2. "வல்லெனவே பாய்ந்திடக், கால் வாங்க முனைகையிலே
   'நில்'லெனவே ஓர்சொல் நிலமதிரக் கேட்டதுவே!"
   *(909-910)*

என்றவாறு தொடர்ச்சியை நிறுத்தும் இவ் ஈரிடங்களில் முற்குறிப்பீட்டிற்குரிய சான்றுகளைக் காணலாகும்.

**உம் — ஊம் — இம்........ என்றவாறெல்லாம்**
**ஊம் கொட்டக் கேட்டல்!....**

"நீங்கள் சொல்லிக்கொண்டிருக்கும் கதை எங்களுக்குப் புரிந்து அதனொடு நாங்கள் தொடர்கின்றோம்" என்னும் நடைமுறைப் பொருளில் — அதனை ஆழ்ந்து கேட்கும் குழந்தைகள் — மிக விருப்பத்தோடு "ஊம்" "ஊம்" என்றவாறு ஒலியிடுவது ஊர்ப்புறங்களில் இன்றும் வழக்கம்!..... அவ்வொலியீடுகள் "உம்", "ஊம்", "இம்" என மூவகையின! இவ்வொலியீடு செய்யும் வினைக்கு, ஊர்ப்புறங்களில் — "ஊம் கொட்டுதல்" என்றவாறு ஒரு செப்பச் சொல் வழக்கு இன்றும் பரவலான நடைமுறையிலுள்ளது! இவ் இலக்கியம் கதைப் பாவியமானதால் — இடையிடையே, — "ஊம்", "இம்" என வரும் மிக அழகார்ந்த இவ்வொலியீடுகளைப் பதிவு செய்கின்றார், ஆசிரியர்!

தாய்க் கழுதை தன் குட்டியிடம் பலவகையான செய்திகளைக் கூறிக் கொண்டிருக்கின்றது!...... குட்டி கேட்டுக் கொண்டிருக்கின்றது!..... இது கேட்டுக் கொண்டிருக்கும்போதே — இவை யாவற்றையும் ஆழ்ந்து தொடர்ந்து இழையறாமல் கேட்டு வரும்படியான விருப்பில் இடையிடையே இப்படி விழிப்புணர்த்துகின்றது!......

1. "நாமுந்தான் பாலுண்போம்; நம் பாலை யார் குடிப்பார்?
"ஊம்" என்று கேள், நீ! உனக்குப் புரிகிறதா?!...'
(183-184)

2. "நம் பிறவி மட்டமென்று நாட்டுமக்கள் எண்ணிவிட்டார்
"இம்" என்று கேட்டால்தான் பேச்சில் இனிப்பிருக்கும்!"
(193-194)

3. "ஊன்பிறவி தன்னில் நாம் ஊத்தைப் பிறவியடி
"இம்" என்று கேள்,நீ! இதற்குமொரு தோது சொல்வேன்!"
(220-221)

என்பன, இவை பயிலுமிடங்கள்!.......

"உம்" என்பது, ஒத்து இசைவு கூறும் ஒலியீடாகவும் தமிழில் வரும். இதனையும் ஈரிடங்களில் தம் பாவியத்தில் — ஏற்ற இடங்களில் ஏற்றிவைத்துள்ளார்!......

அவை, — இவை!

1. "ஒத்ததுங்கள் உள்ளமெனில் 'உம்'மென்று சொல்லுங்கள்"
(1037)

2. "ஒன்றும் மறுப்பிலதாய் 'உம்'மென் றிசைந்தது" (1043)

**வெறுப்பு உணர்ச்சிக் குறிப்புச் சொற்கள்....**

வெறுப்பு உணர்ச்சியைக் குறித்துவழங்கும் சொற்கள் பலவற்றையுங்கூட உரிய இடங்களில் மிக அழகாக இக் கதையிலக்கியத்துள் பதித்துள்ளார், ஆசிரியர். "சீ! சீ! சீ" (796), தூ! தூ! தூ (149), "துத்துத்தூ" (1796) — என இயற்கையான முறைகளில் இவை பதிவெய்தியுள்ளன!

**ஒப்பொலிகளாகிய — ஒலிக் குறிப்புச் சொற்களைப் பயன்படுத்தும் அழகு!.**

வற்றிக் கிடக்கும் தாய் மடியில் — குட்டி தன் வாயை வைத்துப் பாலை உறிஞ்சுகின்றது! அதாவது,

— உறிஞ்சும் முயற்சியாகச் சப்புகின்றது!.... ஆங்கு நிகழும் வினைக்குரிய ஒப்பொலிகளின்வழி — நேரிடையாகவே அக் காட்சியை யாவரும் காணும் வகையில் மிக அழகாக நம் ஐயா பதிவு செய்கின்றார்!

"ஒட்டிக் கிடக்குந் தன் தாய்மடியில் வாய்வைத்துச்
சப்புச் சப் பென்றுவாய் சப்பிச் சலித்துவிட்டே" (226–227)

என வருவன — அவ் வினைப்பாட்டுக் காட்சிக்குரிய வரிகள்!.....

அதுபோலவே, — பாலினைச் சுவைத்து உண்டு மாந்தர் மகிழும் காட்சிக்கென — அச் சுவைத் துய்ப்புக் குரிய ஒப்பொலியாகிய "இச் இச்" எனும் இரட்டைக் கிளவியை யிணைத்து இன்புறுத்துவார், ஓரிடத்தில்!

"இச்சிச் சென மாந்தர் எல்லாரும் உண்டிடவே" (180)

என்பது, அக் காட்சிக்குரிய வரி!

**ஒலிக் குறிப்புச் சொற்களை நிரம்பிய அளவில் பயின்று கதைச் சுவையூட்டத்திற்கு வழிகோலியிருத்தல்......**

கதைக்குச் சுவையூட்டந் தருதலில் ஒலிக் குறிப்புச் சொற்களின் பங்கு — அடிப்படைகளுள் ஒன்று! கதை கேட்கும் குழந்தைகள் அதில் விறுவிறுப்பாக நாட்டஞ் செலுத்துதற்குரிய அடிப்படைக் கிளர்ச்சியைத் தூண்டும் தகைமை — இவ்வகைச் சொற்களின் பொதுஇயல்பு! இவ் வொலிகள் கதை கேட்குநர்க்கு ஆழ்ந்த ஈடுபாட்டையும் — அக் கதையை உள்வாங்குதற்கேற்ற ஈர்ப்பையும் நல்க வல்லன! இவற்றின் பயன்பாட்டையும் திறனையுமுணர்ந்த நம் ஐயா அவர்கள் — இவ் வகை ஒலிக் குறிப்புச் சொற்களை நூல் முழுவதும் பலபடப்

பரந்து பயில்வுறுமாறு செய்து படரவிட்டுக் கதை யோட்டத்திற்கிடையே ஈர்ப்பு ஏற்றத்தையும் — சுவை யூட்டத்தையும் கூட்டியிருக்கின்றார்!

வெலவெலத்து (853), பளபளக்கும் (233) (649), தளதளக்கும் (724), சலசலத்து (730), காழ் காழ் என்றோலமிட்டு (10) (148), காச்சு காச்சென்று (216), கிசுமுசுத்து (1011), சீத்துப்பூத்தென்று (1156), விண்ணென்னும் (342), பொத்தென்று (289) (1020), தடக் கென்றொடித்து (975), பொதபொதக்கும் (187), சவசவக்கும் (340), பிசுபிசுத்த தோலும் (141), குறுகுறென (225), குறுகுறுப்பாய் (512), கிடுகிடுக்க (857) (1099), படபடக்க (1475) 1501), மெத்தென்று (1021), சில்லிட்டுப் போனது (912), சில்லென்று (954), சிவ்வென்று (1832) — என வரும் இவ் வொலிக் குறிப்பீட்டுச் சொற்கள் இக் கதைப் பாவியத்துள் உரிய இடங்களில் மிக அருமையாகப் பதிவுற்றுள்ளன!

**எல்லைமீறிப் புகுந்த புறச்சொற்களின் இயைப்பு அழகு!.....**

சிறார் சிறுமியர்க்கெனப் படைத்த கதைப் பாவியமானதால் — ஊன்றிப் பயிலுநர்க்கு ஊட்டந்தரும் இலக்கியச் சுவையெழுச்சிக்குத் துணையாகத் — தம் தனித் தமிழெல்லைக்குரிய கருப்பொருள்களையும் தாண்டியவாறு காட்சியருமை விளைக்கும் இரு புறச் சொற்களைப் பதிவு செய்துள்ள ஈரிடங்கள் கொள்ளை யழகு ஊட்டுவன!.....

தாய்க் கழுதை தன் குட்டிக் கழுதையிடம் — மெத்தவும் சீராட்டி வளர்க்கப்பெறும் செல்வர் வீட்டு நாய் ஒன்றனைப் பற்றிக் கூறுமிடத்தில், —

"சேட்டுக் குழந்தைபோல் சீராட்டிப் பாராட்டிக்
கொஞ்சி வளர்க்கப் படுவதுவும் கூறுவதோ ?!...." (68-69)

எனவும்,

இடையில் வந்து நட்புகொண்ட காளை — குட்டிக கழுதையின் தோற்ற எழில் நலத்தை அக் குட்டியின் தாய்க் கழுதையிடம் வியந்து சுட்டுமிடத்தில், —

"ஆகா உன்பிள்ளை அரபிக் குதிரைபோல்
தோற்றமளிக் கின்றாளே" (278-280)

எனவும், வருவன — அவ் அழகிய பதிவிடங்கள்!.....

## கருத்தின்முன் கருச் செய்தி!

செய்தியைச் சொல்லும்போதே — அச் செய்தியுள் கிடக்கும் கருவைச் சூழ்ந்துள்ள உருவும் திருவும் புலனாகுமாறான வெளிப்படுத்தம் — எழுத்தாக்க வினைமுறையில் நம் ஐயா அவர்களுக்குக் கைவந்த கலையாகும்! அது மிக நுண்ணுட்பமான வீச்சு அமைவுடையது! "காந்தும் இளமையெழும் கன்னிப் பருவத்து" (20) என வரும் ஒரேயோர் இடத்தை மட்டும் ஒருசோற்றுப் பதனாக இவ்விடத்தில் நாம் கருதிப் பார்க்கலாகும். 'கன்னிப் பருவம்' எனலோடு அடங்காது — உடன் இளமையைச் சுட்டுதலும், அவ் இளமை எழுச்சியுறுதலை அதனொடு பிணைத்துச் சுட்டுதலும் (....இளமையெழும்.....), அக் கன்னிப்பருவம் ஆடவ ராகியோர் உள்ளத்தை — உணர்வைப் பற்றியீர்க்கும் பான்மையுடைமையைக் குறிக்குமாறு "காந்தும்" எனுஞ் சொல்லை முறபடுமாறு முகப்பிற்பூட்டலும் ஐயா அவர்களின் தனீஇ இயல்புத் திறங்கள்!.......

"கிளி" என வருமிடத்து (அக் கிளியின் ஒலிவெளிப் பாட்டுச் செப்பத் தெளிவு குறிக்கும் வகையிலாகச்) ''செஞ்சொல்'' என்றவாறு முன்அடையிடுதலும் [காண்க : செஞ்சொல் கிளியாய் (25)], "குயில்" என வருமிடத்து ''அஞ்சொல்'' என்றவாறு முன் அடையிடுதலும் [காண்க : அஞ்சொல் குயிலாய் (26)] போன்ற தெண் காட்சிகள் இவ் இலக்கியத்துள் பல்லிடத்தமைந்துள்ளன!

காளை மாட்டின் மிக மிக நீண்ட கொம்புகள் உடைமையைச் சுட்ட வேண்டிய ஓரிடம்!..... நெட்டை — நெடும் — நீள் என்றவாறான எளிய சொற்களைக் கொண்டே தெளிய அடுக்கி "நெட்டை நெடுங்கொம்பு நீள் காளை மாடு...." (864) என்னுமாறு மிக இயல்பாக அமைத்துள்ள அவ்வரியினுள் — கருத்தொன்றை வலிமையுறச் செய்தற்குச் சொற்களை மென்னுட்பமாகப் பயன்படுத்தும் ஐயா அவர்களின் அரிய உத்திமுறையும் பதிந்துள்ளமையைக் காணலாகும்.

### மொழி ஞாயிற்றின் பாவலரேறு!

பாவலரேறு ஐயா அவாகள சொல் தெரிதல் வல்ல திறத்தினராதலின், — சொல்லின் வேர்ப்பொருள் நாட்ட ஈடுபாடும் தெளிவும் அவரின் எழுத்தோட்டங்களிடையே மிக இயல்பாகக் காணப்பெறுவன! இப் பாவியத்தில் பயன்படுத்தியுள்ள சொற்கள் சிலவற்றின் முன்னீடாகப் பதித்துவைத்துள்ள அடைகளிலும் — அணிப்படுத்தச் செய்திகளிலும் அவரின் வேரடிப்படைச் சிந்தனை யோட்டங்களின் தெளிவும் எழிலும் அருமையாகப் பதிவுற்றுள்ளன! அவ் வெளிப்பாடுகள் நுண்ணிய போக்கின!

அவற்றுள் சில:

1. "பெருங்கழுகாய்" (28) (கருத்து அடிப்படை:
கழு > கழு + வு > கழுவு > கழுகு)
(கழு = பெருமை; திரட்சி)

2. "ஆழ்கடலில் வட்டமிடும் ஆலாவாய்" (32)
(கருத்து அடிப்படை: அல் > ஆல் > ஆலு >
ஆலு + தல் > ஆலுதல் = சுற்றுதல்; வட்டமிடுதல்.

3. "நாகரிகம் ஓங்கும் நகரென்றும்" (709)
"நகரத்தில் வாழ்கின்ற மக்களெனும் நாகரிக மாக்கள்"
(1550-1551)
(கருத்து அடிப்படை: நகர் > நகர் + இகம் >
நகரிகம் > நாகரிகம்)

வேரியல் அடிப்படையிலான நுண்பதிவு:

[ தா = கொடு. (ஒ.நோ : தா + ஆய் > தாஅய் >
தாய் = ஈன்றவள்)
தா = கொடுத்தவன்; தந்தவன்; தந்தை.
(ஒ.நோ : தா + தா > தாத்தா = தந்தைக்குத்
தந்தை; பாட்டன்)
அய் > ஆய் = அப்பன்; தலைவன்.
அய் > ஐ = தலைவன்; அப்பன்

தந்த + ஆய் > தந்தாய் > தந்தய் > தந்தை =
தந்தவன்; கொடுத்தவன், பிள்ளையைத்
தந்தவனாகிய (கொடுத்தவனாகிய) அப்பன்.

தந்தை என்பதற்குரிய சொற்காரணப் பொருண்மை யுடைய தருதல் வினையை நெஞ்சில் தாங்கியிருந்த நம் ஐயா அவர்கள் — இப் பாவியத்தில் அவ் வேரியல்

செய்தியை மிக இயல்பாகப் பதிவு செய்திருக்கும் இடங்கள் — தனித்த கவர்ச்சியுடையன! (பெண்ணொருத்தியின் கருப் பேற்றுக்குக் காரணகனான ஒருவனை— "அவன் தான் இவளுக்குப் பிள்ளையைக் கொடுத்துவிட்டுப் போனவன்" என்றவாறு குறிப்பிட்டுச் சுட்டிப் பேசிக் கொள்ளும் இன்றைய வழக்காறுகள் பல — இவ் விடத்தில் ஒப்பிட்டுக் கருதத் தக்கன!)

1. "மண்ணான வாழ்க்கைக்கென் மன்னவன்தான் தந்துசென்ற
பெண்ணரசை இன்றிழந்தேன்.........." (740-741)

2. "........................................................குப்பத்துச்
சின்னான் ஏ காலி சிதம்பரம்போய் வாங்கிவந்த
பொன்னான் எனுங்கழுதை 'பூவாய்'க்குத் தந்த மகன்"
(391-393)

என வரும் ஈரிடங்களில் — தந்தை குறித்த சொற் காரணத்தை விளக்கிய வெளிப்பாடுகள், அவரின் வேரியல் சிந்தனைத் தோய்வைக் காட்டுவனவாகும்.

**துண்துளியாய் = துளித் துளியாய்!......**

"துளி" என்னும் சொல்லுக்கு முன்னீட்டு வேர்ச சொல் 'துள்' என்பதே என்னும் அடிப்படை தெளிந்து— 'துளித் துளியாய்' என வரவேண்டியவிடத்துத் 'துண் துளியாய்' என்னுமாறு பின்வரும் வரியிலமையவுள்ள எதிர்கை(எதுகை) இயைவுக்கியையப் புதுக்கி நிறுத்தி யுள்ள அழகு — அவரின் வேர்நிலைப் பார்வையுள் ஒரு வீச்சுக் கதிரே ஆகும்.

காண்க: "துண்துளியாய் அச்சம் துடைத்துத் துணிவடைந்து
மண்தரையைப் பின்காலால் எற்றி மறங்காட்டி"
(254-255)

**திருத்தச் சொல் பதித்து மொழிநலம் மீட்டல்!......**

திசைந்து வழங்கும் சொற்கள் சிலவற்றின் திரிபுகளை நேருறத் திருத்தி — அத் திருத்தச் சொற்க ளையே பதிவு செய்யும் போக்கு — ஐயா அவர்களுக்கு இயல்பான எழுத்து நடைமுறை!

1. 'தெம்மாங்கு' இதன் செப்பவடிவம், "தென்பாங்கு".

காண்க: "ஆவிஉருகிடவே மாலையில் ஆற்றிடையில்
ஏறத் தொடுக்கும் இடையன் தென்பாங்கு
— எனவும்" (272-273)

2. 'இலுப்பை' — இதன் செப்பவடிவம், "இருப்பை".

காண்க: "ஈங்கிதுகாண் பெண்ணே இருப்பைக் காடு
— இக்காடு" (1091)

3. 'வெள்ளென' — இதன் செப்பவடிவம், "வல்லென".

காண்க: "...............தீங்குவந்து விட்டதென்று
வல்லெனவே பாய்ந்திடக், கால் வாங்க
முனைகையிலே" (908-909)

இவ்வாறு, பல இடங்களில் இக் கதைப் பாவியத்துள் உரிய திருத்தச் சொற்களாகவே அவ்வவ்விடத்துங் கையாண்டு மொழிநல மீட்சிக்கு வழிகாட்டியுள்ளமை நாம் கண்டு பின்பற்றவேயாம்!

**உவமையடுக்கத் திறத்திற்கு உவமைகாட்டத் தக்கவர்!......**

கழுதையுடம்பில் தொங்கும் மயிர்த்திரளை நம்மில் பலர் எத்தனையோ முறை பார்த்திருக்கின்றோம்! எதனோடாவது அத் திரள் தொங்கலை ஒப்பிட்டுப் பார்த்து எண்ணியிருக்கின்றோமா?!..... ஐயா அவர்களின் உவமையில் அது இவ்வாறு காட்சி தருகின்றது!

காண்க: "நாரத்தங் காயின் நடுநார்போல் மேனியெங்கும்
தொங்கும் பழுத்த மயிர்த்திரளும்" (142-143)

உவமை கூறலில் வல்லிய ஆண்மையர் அவர்.

"கல்லார் மனம்போல் கருமையிருள்! அவ்விருளில்
பொல்லார் மனம்போல் புதைகுழியும் முட்புதரும்!"
(887-888)

என்றவாறு இந்நூலுள் வரும் அவரின் சிறந்த வரிச் செய்திகள் பலவும் இவ் வகையில் எண்ணியுணர்ந்து இன்புறத் தக்கன!

உவமை கூறப் புகுந்தவிடத்து — ஒன்றன்மேல் ஒன்றாக உவமைகளை அடுக்கம் வைத்து ஏற்றி அணி செய்யும் திறத்தில் — ஐயா அவர்கள் நிகரற்றவர் என்பதற்குக் கீழ்வரும் ஒருவரி ஓர் ஒப்பற்ற சான்று!......

இறந்துபோன கழுதையின் கணவனைப் பற்றி, அதனிடம் அங்கு வந்த காளை நினைவூட்டுகின்றது; "கணவன்" என்னும் அச் சொல்லைக் கேட்ட மாத்திரத் திலேயே கழுதைக்கு உடலெல்லாம் சிலிர்சிலிர்ப்பு; 'துடும்' என மயங்கி விழுந்துவிடுகின்றது! அவ்விடத்தில் — கழுதை விழுந்த செய்தி குறித்துப் பாவியத்துள் இவ்வாறு உவமையடுக்கம் புரிகின்றார், ஆசிரியர்! அவரின் அவ் வகை வியல்திறத்தையேற்ற ஓர் ஏற்றக் காட்சி, இது!......

"மின்சாரம் பாய்ந்ததுபோல், மேனி சிலிர்சிலிர்க்க,
மண்சார மற்ற மரமற்று வீழ்வதுபோல்,
பொத்தென்று கீழே பொதிபோல் விழுந்ததுவே"
(287-289)

(பொதி மூட்டையொன்று வீழ்கையில் ஏற்படும் ஒலிக் குறிப்பைப் — "பொத்" எனும் சொல்லிட்டுச் சுட்டுகின்ற அழகும் ஈண்டுத் துய்த்துச் சுவைக்கத் தக்கது!)

**கழக இலக்கியத் தோய்வின் தாக்குரவு!......**

நம் ஐயா அவர்கள், — கழக இலக்கியங்களில் தனித்த தோய்வும், துய்த்துத் துய்த்துச் சுவைத்து மகிழத் தக்க வகைமையில் அவற்றைப் பிறரிடம் விளக்குந் திறமும் உடையவரென்பதை — அவரை அணுகியிருந்தவர் எவரும் அறிவர். அவரின் தோய்வையும் அதன்வழி அவர் பெற்றிருந்த புலவளத்திறனையும் அவரால் யாத்துத் தொகுக்கப் பெற்ற "நூறாசிரியம்" என்னும் நுண்ணிய நூலுள் சிறக்கக் காணலாகும்! அக் கழக இலக்கியத் தோய்வின் தாக்குரவு — இக் கதைப் பாவியத்துள்ளும் சில்லிடங்களில் படிவெய்தியுள்ளன.

தழைத்து வளரும் இளமரங்களடர்ந்த காட்டினைப் 'பொதும்பர்' என்பது, அக் கால வழக்கு. பொதும்பரின் தோற்றங் குறித்துக் 'கடியலூர் உருத்திரங்கண்ணனார்' கூறுகையில் — "அப் பொதும்பரில் வெயில் (கதிரவ ஒளி) நுழைந்ததேயில்லை! ஆனால், ஆங்குச் செறிந்தமைந்துள்ள இலை–தழைகளூடே குயில்கள் நுழைந்தியங்கும்" — என்பார்! இக் கருத்தைத் தாங்கிய அவரின் இலக்கிய வரி — "வெயினுழை பறியாக் குயினுழை பொதும்பர்" (பெரும்பாண் : 374) என்பதாகும்.

இவ் அழகிய ஆக்கம் பதிவுற்றுள்ள வரிக் கருத்தில் ஐயா அவர்கள் மனந்தோய்ந்திருந்த உண்மையின் வீச்சு — இப் பாவியத்துள் ஈரிடங்களில் வேற்றுருக்கள்

கொண்டு பட்டுத் தெறித்திருக்கின்றமையைக் காணலாகும்.

1. "பின்னிப் பிணைந்து பெருங்காற்றும் சூரியனும்
உள்ளே வராதபடி ஓங்கி அடர்ந்திருந்து" **(882-883)**

2. "புட்கள் நுழையாப் பொதிந்த தழையிலைகள்" **(1068)**

என்பன, அவ்விரு பதிவிடங்கள்!

"இளமரக் காட்டின் தழைத்த பகுதியில் வெயில் நுழைந்ததில்லை — ஆனால் குயில் நுழையும்" என்பது, பெரும்பாணாற்றுப்படையில் வரும் கருத்துவரி! அக் குயில் போலும் பறவைகள் எவையும் நுழையவே இயலாதவாறான பொதிவார்ந்த தழையிலைகள் செறிந்த கானப் பகுதி யிது — என்னும், இப் பாவலரேறு ஐயா அவர்களின் செறிந்த வண்பார்வை — அக் கழக இலக்கியப் பாவலரின் பார்வையினும் வேற்றுக் கோணத் திறச் சிறப்புடையதாகவே திகழ்கின்றது!

இலைகள் அற்றுப்போய்ப் — பூக்கள் பூக்கத் தொடங்கிய இலவ மரத்தின் காட்சி — மகளிர் எடுத்த விளக்கு வரிசை போலத் தோன்றின. (அகம் : 11 : 2-5); — இலையில்லனவாய் இலவ மரங்கள் ஒருங்கே மலர்ந் திருப்பது பெருவிழாவுக்கு (கார்த்திகை) இடும் விளக்குப் போலக் காணப் பெற்றது (அகம் : 183 : 11,12); — இலவத்து முதிர்ந்த பூக்கள் — விழாக் கோலம் பூண்ட ஊரில் ஏற்றப்பெற்ற நெய்விளக்கின் சுடர், விழுவதுபோலக் காற்றால் உதிர்ந்தன (அகம் : 17 : 17-20); — இலவத்தின் மலர்கள் எரி தளிர்த்தாற்போல் தோன்றும் (அகம் : 243 : 14-16); — இலவத்தின் கொத்தான பூக்கள் வெப்பக்காற்று வீசுகையினாலே இடியில் தோன்றிய

தீயைப் போல உதிரும் (ஐங்குறு : 320 : 1-2); — மலையில் தோன்றிய தீயினைப் போல — இலவம் சுரத்தில் காணப்பெற்றது (ஐங்குறு : 338 : 2-3); — நெருப்புப் போன்று உதிர்ந்தன இலவத்து மலர்கள் (ஐங்குறு : 368 : 1-3); — மலர்ந்த இலவ மரத்தில் ஏறிய மயில் எரிபுகு மகளிரைப் போலக் காணப்படும் (ஐங்குறு : 3 : 1-3); — என்றவாறு இலவம்பூ பூக்கும் காட்சிகளையெல்லாம் கழக இலக்கியக் களத்தில் கண்டு கண்டு துய்த்த நம் தூயவர் — இப் பாவியத்தில் பல்வேறு மரங்களை வகைவகையாக அடுக்கிக் கூறிச் செல்லும் வேளையில் — இலவ மரத்தைக் குறிப்பிட வேண்டிய இடம் வருகையில் மிக இயல்பாக — மிக மென்மையான வீச்சாக ஓரேயோர் ஒற்றைச் சொல்லை மட்டும் அவ் இலவத்துக்கு முன்னீடாக இடுகின்றார்! அது, — இது!

**"முந்திரியும் நல்லிலந்தும் மூங்கிலொடு தீயிலவம்" (876)**

அவர் கண்ட கழக இலக்கியத்துள் இலவங்கள் நின்றிருந்த ஒளிக்கோலத் தாக்கக் காட்சிகளின் ஒட்டு மொத்தத் திரள்வுப் பொறியாகவே இத் "தீ" எனும் சொல் — அம் மரப் பெயர்ச் சுட்டுகையின் முன் ஒள்ளொளியாகச் சுடர் விடுகின்றது!

**குறள் சாற்றுத் தாக்குரவு!......**

கடைக் கழக அறநூல்களிலேயே தலைசிறந்ததாகிய திருக்குறளுள் தோய்வும் ஆய்வும் வாய்ந்த வாழ்க்கைய ராகிய நம் பாவலரேறு — இப் பாவியத்துள் உரிய இடங்களில் அதனைப் பதிவு செய்திருப்பதோடு — அதன் தன்னேரிலாத சிறப்பையும் நன்கு பாராட்டியுள்ளார்.

தெய்வத் திருக்குறள் — தேர்ந்த அறநூல் — வாழ்க்கைக்கே உய்வுதரும் உற்ற உயர்நூல் என்பன, அப் பதிவிடங்களிற் சில. குறட் கருத்துகளின் சாற்றுப் பிழிவுகளும் — நூலுள் பல்லிடங்க ளில் பதிவுற்றுள்ளன. "குடம்பை தனித்தொழியப் புள்பறந்தற்றே" (குறள் : 338) என்னும் குறட்கருத்துச் சாறு, இப் பாவியத்துள் "கூட்டிலுள்ள ஆவி குடிபெயர்ந்து போவதுபோல்" (854) என்னும் படிவாகப் பிழிவுற்றுள்ளது. அதுபோல், "அளவிறந்து ஆவதுபோலக் கெடும்" (குறள் : 283) எனும் குறட்கருத்தின் சாறு, "அந்நாள் வரையிலும் ஆக்கம் போல் வீழ்விருக்கும் (705) எனும் படிவில் பிழிவாகி யுள்ளமையையும் காணலாம்!

திருக்குறள் அறநெறிப் பிடிப்பிலேயே தோய்ந்து மூழ்கிக் கிடந்த மனத்தினராயிருந்தமையால் — ஆக்க வெளிப்பாடுகளில் இத் தகு நல்லோதங்களாகச் சாரலடிக்கை இயல்பானதுதான்!..... அவ்வியல்பின் உண்மையை அவரின் அனைத்து எழுத்து ஓட்பங்க ளிலும் நிரவலாகக் கதிர்வீசுவதை உற்று உள்நோக்குநர் உணர்ந்து மகிழ்வர்!

இப் பாவியத்தின் சில்லிடங்களில் — திருக்குறளிற் பயிலும் சொற்கள் சிலவும் தெள்ளிதாகப் படிவெய்தி யுள்ளன. "வல்விலங்கின் வாய்க்கு வருவிருந்தாய்ப் போனாளோ ?" (843) என இப்பாவியத்துள் வரும் ஒரு வரி, "வருவிருந்து பார்த்திருப்பான்" (86) எனுங் குறள் வரியை நமக்கு நினைவுபடுத்தக் காணலாம்! ஏனெனில், அது குறட் சொல்! அதுபோல், "சாந்துணையும்" (— துன்பந்தான்!) (449) என வரும் பதிவுச் சொல்லும் — "சாந்துணையும்" கல்லாதவாறு (குறள் : 397) எனுங் குறள்வரியை நினைவுறுத்தக் காணலாம்!

**நுண்ணிய உணர்வுகளைப் பதிவுசெய்துள்ள இடங்கள்!......**

1. மிக மேம்பட்ட புகழ்ச்சியுரைகளைக் கூறி, புல்லரித்துப் போகும்வண்ணம் காளைமாட்டைத் திளைக்கச் செய்கின்றது, (இப் பாவியத்—) தாய்க் கழுதை!..... அப் புகழ்ச்சியுரைகளால் அளவற்ற மகிழ்ச்சி வெள்ளத்தில் காளை மிதக்கின்றது!..... அவ் வுரை — அக் காளைக்கு எவ்வகையிலான பேரின்பத்தையும் பெருமகிழ்ச்சியையும் தந்தது என விளக்கவந்தவிடத்தில், — "அதற்கு இப்படியிருந்தது!"..... என்கிறார், ஆசிரியர். எப்படி ?!.....

வெப்பம் மிகுந்த கோடைக்காலம்... — ...அக் காலத்தில் தன் எதிரில் உள்ள தொட்டியில் பழங் கஞ்சியின் காடியாகிய புளிப்பேறிய நீர் உள்ளது!.... அந் நீரோ நுரைத்துப் பொங்கியவாறுள்ளது!.... பொங்கும் புளித்த அக் காடிநீரிலிருந்து புளிப்பு மணம் வீச்சடிக் கின்றது!.... (கமழ்கின்றது!....) (அத் தகு மணப் பரவல் காளையின் மூக்குக்கு எல்லையில்லா இன்பம் வழங்க வல்லது!) நாமும் காளையாகக் கற்பனையில் நின்று மோந்து துய்க்கையில்தான் — இது புலனாகும்! இப் புலனின்பத் துய்ப்பை — ஐயா அவர்கள் வைத்துப் பதித்துள்ள முறைமை, நனி துய்ப்புக்குரியது! அது, — இது!.....

**"..............................செறிந்ததொரு கோடையிலே**
**பொங்கும் நுரைத்த புளிநீர் மணம் போலும்" (269-270)**

2. சினம் ஏற்படுகையிலும் — ஏக்கத்தால் குமைந்து பொருமுகையிலும் (அழாமல் மிகவும் அடக்கிக் கொண்டு விம்முகையிலும்) காதின் உட்பகுதியில் வெம்மையேற்படும் மாந்தரின் இயல்பை — அத் தகு

சூழலில் நுண்ணிதாக உணர்ந்துபார்க்கும் திறத்தவரே உணரவியலும்! (இவ் வுண்மை — கழக இலக்கியத்திலும் ஓரிடத்தில் பதிவுற்றுள்ளது.) (பாவியக் கொத்தின் — ஓரிடத்தில் — "காதகம் கனல" என்றவாறு ஐயா அவர்கள் பதிவு செய்துள்ளமையும் இவ்விடத்தில் கருதுதற்குரியது!) அவ் வுணர்ச்சியுணர்வின் உண்மை — இப் பாவியத்துள்ளும் "காதில் கனல்பாய" (1229) எனும் வரியொன்றில் அழகுறப் பதிவுற்றுள்ளது!

அரிமாவுக்குச சினம் ஏற்படுகின்றது!... அப்பொழுது — அது கொள்ளும் உணர்ச்சியின் பாரிய அடையாளமாக — அதன் மூக்குத் தொளைகள் அகலினவாக விரிவுறுகின்றன எனும் காட்சியீடு — கண்ணுற்றுணர்ந் தாராலேயே முன்வைக்க இயலுவதாகிய அரிய பதிவாகும்.

*"முற்றிய வன்சினத்தால் மூக்குத் தொளைவிரியச்*
*செம்மண் முகமாறிச் செவ்வானம்போல் சிவக்க.....'*

**(1436-1437)**

என வரும் ஐயா அவர்களின் வரிகள் — அரிமாவின் சினத்தையும் சீற்றத்தையும் அவற்றின் காரணமாக முகனுறுப்புக்களாகிய மூக்குத் தொளைகள் விரிவூற்றையும் — முகநிற வகை மாற்றத்தையும் அழகிய நேரீட்டுக் காட்சியாகவே முன்னிறுத்துகின்றன!

**மக்கள்........ மாக்கள்!......**

இக் காலத் தமிழ்மக்கள், — தம் வாழ்வியல் ஒழுங் கழிந்தும் பண்பு குலைந்தும் தத்தமக்குள் வேற்றுமைகள் பாராட்டிக் கொண்டு வீணே இழிந்து தாழ்ந்துகிடக்கும் கீழ்நிலைகளையெல்லாம் நம் ஐயா அவர்கள் எண்ணி

யெண்ணிக் குமைந்து நைந்து — இக் கதைப் பாவியத்துள் — அவைபற்றிய தம் ஆற்றாமைகளை விலங்குகளைவிட்டே பேசவைத்திருக்கின்றார்!

இக் கதையுள் — மாக்களாகிய விலங்குகள் — மக்களாகிய மாந்தரை மிகப்பல இடங்களில் இழித்துரைக் கின்றன! மாந்தரின் கயமைத் தன்மைகளை — போலித் தன்மைகளை — ஏய்ப்புகளை— ஏமாற்றுகளை — அவ் விலங்குகள் சுட்டிக் கூறும் காட்சிகளில் மனம் பதிக்கையில் — "ஆம்! இம் மக்கள் அம் மாக்களினும் மிகத் தாழ்ந்தோராய் இயங்குகின்ற நிலைகள் அறவெறுக்கத் தக்கனதாம்!" என்னும் உணர்வே நமக்கும் ஏற்படுகின்றது!

"சின்ன உளம் பெற்ற சீர் அறியா மக்கள்" (97), "மக்கள் என்ற பேராலே வாழ்ந்துவரும் மாந்தர்" (99), "கல் வன்மனத்து மாந்தர்" (1178), "உண்கவளத்திற்காக உள்ளத்தை விற்கின்ற மக்கள்" (1258), "மக்களென வாழ்ந் திருக்கும் மாண்பவிந்த கூட்டம்" (1754), "மக்களெனும் நாகரிக மாக்கள்" (1551) — என்றவாறு இக் கதைப் பாவியத்துள் வரும் வரிகள் — மக்களைச் சுட்டி விலங்குகள் பேசும் சில இடங்களாகுவன!.... அக் குறிப்பீடுகளினுள் — இக் கால மக்களின் இழிநிலையமைவு பற்றிய நம் ஐயா அவர்களின் பொதுக் கருத்தும் — அதற்கென அவர் இரங்கலும் எரிச்சலும் — அவ் விழிவான தகைமையின்மைகளை அன்னாரிடமிருந்து தகர்த்தெறிய விரும்பும் அவரின் நன்னோக்கமும் பதிவுற்றுள்ளன!

**"எத்தனைப்பேர் வந்திவ் வுலகத் திழிவகற்ற**
**எத்தனையாய்ச் சொன்னார் எதுவும் பயனிலையே!'**

***(1289-1290)***

என்றவாறு வரும் தாய்க்கழுதைக் கூற்றுவழியாக — இம் மாந்தரைத் திருத்தி நிறுத்த அறிவர் பல்லோர் முன்பு பட்ட பாடுகளை நீளநினைந்து ஏக்கத்தோடு பதிவு செய்திருப்பதை இவ்விடத்தில் நாம் கருதிப் பார்த்தல் வேண்டும்.

மாந்தர் என்னும் சொல் — "மைந்து" என்னும் வலிமைக் கருத்து அடிப்படையிலாக (— மைந்து > மந்து > மாந்து > மாந்து > அர் > மாந்தர் =) வலிமையுடையோர் என்னும் பொருட்பாட்டைக் கொண்டதாகும்.

(ஒ.நோ: 1. மைந்து > மைஞ்சு > மஞ்சு.

(மேலுங்காண்க: ஐந்து > ஐஞ்சு > அஞ்சு)
(பேச்சு வழக்கு)

(மஞ்சு: வலிமை, > வலிமையுடைய காளை.)

(ஒ.நோ: மஞ்சு வெருட்டு = காளை வெருட்டலாகிய (விரட்டல்) மற விளையாட்டு)

மாந்தர்க்கு இயல்பாய் அமைந்திருக்க வேண்டிய மனநேயமே அற்று —, வெற்றுப் புலன் வாழ்க்கை வாழும் விலங்குகளாக — வெறுமனே தின்னும்வாழ்வில் திளைக்கும் கொடிய ஊண்மாக்களாக இவர்கள் விளங்குகின்றார்கள் என்னும் குறிப்புத் தோன்றுமுகமாக — மாந்தர் எனும் சொல்லாக்கத்திற்கு "மாந்துதல்" என்னும் நிரம்பவுண்ணுகைக் காரணத்தை (விளையாட்டான வேர்ச்சொல் காட்டும் பதிவு முறையிலாக—) (மொழியியலர் இதனை நகையாட்டுச் சொல்லியல் — முறை, என்பர்!) வேண்டுமென்றே வலியப் புணர்த்தி, — குட்டிக் கழுதைக் கூற்றாக

ஓரிடத்தில் மிகக் கவினுறப் பதிவு செய்கின்றார், நம் ஐயா!

காண்க: *"தின்னுவதால் மாந்தர்எனும் தீய விலங்குகள்"* **(1798)**

ஓட்டுமொத்த முடிபாக — மாந்தரினமே மூட இனம் என்றவாறு முழு வெறுப்புக் குறிப்பைக் காளை வாய் வழியே ஓரிடத்தில் பதிவுசெய்துள்ளமையும் ஈண்டு எண்ணத்தக்கது.

**"மொத்தத்தில் மக்களெனும் மூடஇனம்" (482)** — என்பது இக் கதைப்பாவியத்துள் காளை வழங்கும் வாய்மொழி!.....

பொருளியல் நிலையில் பெருத்த வேறுபாடுகள் கொண்டு — மாறுபாடான வாழ்க்கை வாழ்வதோடு — அடிப்படை நேயவுணர்வே அற்றவராகவும் இம் மக்கள் வாழ்கின்றனர்! தற்பெருமையும் — பொய்யாகப் புனைந்து புகழ்ச்சிமொழிகளைக் கூறி ஏய்க்கும் தன்மையும் உடையவராக மக்கள் இயங்குகின்றனர்; அவர்களிடையே அன்பில்லை; நேர்மையில்லை; தொண்டுணர்வில்லை; கள்ளாமையில்லை; ஒற்றுமையில்லை; ஒழுங்கில்லை; உண்மை வினையில்லை; அன்னவருள் கற்றோரிடமே மிகுந்த கள்ளம் குடிகொண்டிருக்கின்றது. (1201-1205). மேற்குறித்துள்ள. இவ்விழி தகைமைகளைப் பற்றி விலங்குகள் தம் உரையாடலிடையே குறிப்பிட்டு எள்ளும் நிலையிலாக நம் ஐயா அவர்கள் இக் கதைப் பாவியத் தின் பல பகுதிகளை மிக அருமையாக அமைத்துள்ளார்! இழிந்த மனப்பான்மை வாய்ந்துள்ள மாந்தர்கள் வெட்கித் திருந்தும் வகையிலாக இவை பதிவெய்தியுள்ளன!

இன்ன வகையினரான கொடிய மாந்தரை — விலங்குகளைவிட்டுக் கொன்று — அவற்றிற்குரிய உணவாகவே செய்துவிடவேண்டும் என்ற தம் உள்ளக் குமுறல் சான்ற ஆழ்மனவிருப்பத்தைக் கதைப் பாவியத்துள், ஐயா அவர்கள் பதித்துள்ள இடம்—, மிகவும் அழகுடையது!

(இப் பாவியத்தின்— ஓரிடத்தில்—) காட்டரசனாகிய அரிமா — மற்ற விலங்குகளை அழைத்து இவ்வாறு அன்புடன் அறிவுறுத்துகின்றது!

*"நம்மில் சிலர்போய் நகரத்தில் வாழ்கின்ற*
*மக்களெனும் நாகரிக மாக்களிலே சிற்சிலரைத்*
*தக்கபடி கொண்டுவந்து – தான் தின்னல் வேண்டும், இனி"*
***(1550-1552)***

அவ் அரிமா — அவர்கள் (அந் நாகரிக மாக்கள்!) யார் —யார் என்றும் அடுத்துப் பட்டியலிட்டுச் சொல்கின்றது!....

***"பொல்லா அறக்கொடியோர்; பொய் புனைந்து வாழ்ந்திடுவோர்;***
***இல்லாத ஏழையரை எத்திப் பிழைத்திடுவோர்;***
***கன்னியரைக் கற்பழிப்போர்; கையூட்டு வாங்கிடுவோர்;***
***துன்னக் கொலைவிளைப்போர்; போலித் துறவியர்கள்;***
***கல்லாத மூடர்; கயவர்; பெருங்களியர்***
***எல்லாரும் நாம் உண்ணற் கேற்ற விலங்குகளாம்!***
***அத்தகையோ ரைத்தான் அருந்தல்வேண் டும், இனி, நாம்!"***
***(1557-1563)***

ஐயா அவர்களின் அறச் சினத்தோடு கூடிய உள் விருப்பம் — அரிமாவின் (மேற்சுட்டியுள்ள) இவ்வகைக் கட்டளைக்குள் கட்டமைந்து கிடப்பதாகவே நமக்குப் படுகின்றது!

**தாழ்வுயர்வு கற்பிக்கும் தாழ்ச்சி!......**

நம் தமிழ்மக்கள் தங்களுக்குள் மேல்கீழ் என்றவாறு பகுத்துக்கொண்டு இயங்கும் கீழ்மையைக் கண்டு மனங் கொதித்து — அவற்றை எதிர்த்து அறிவு விளக்கம் கொளுத்தும் பணியையும் தம் வாழ்நாட் கடமைகளுள் ஒன்றாகச் செய்துவந்த கொள்கையராகிய நம் ஐயா அவர்கள் — இக் கதைப் பாவியத்துள் அதற்கெனப் பல இடங்களைப் பயன்படுத்தியுள்ளார்!

ஒரே வகை உரு; ஒரே வகை உணர்வு; ஒரே வகையிலாகிய இனப் பிறப்பு — இப்படியிருக்கையில், ஒரு சாரரைப் பீழைப் பிறப்பினர் (குவற்றுப் பிறப்பினர் — இழிபிறப்பினர்) என்றவாறு பாகுபடுத்திப் பார்க்கும் மடமையையும் — தாழ்வுயர்வு கற்பிக்கும் தாழ்ச்சியாந் தன்மையையும் தக்க இடங்களிலெல்லாம் அறிவார்ந்த அடிகொடுத்துத் தெருட்டுகின்றார்!

**பாழ்மைசேர் சாதிப் பகுப்பு!......**

*"கீழ்மைக்கும் கீழ்மையதாய்க் கேடுகட்டும் கேடாகும்*
*பாழ்மைசேர் சாதிப் பகுப்புகள்..........."* **(1731-1732)**

என்னும் அரிமாவின் குரலுக்குள் — தம் உள்ளக் குமுறலின் உரறலைப் பதிவு செய்கின்றார், ஐயா அவர்கள்!

இவ் வகையிலாகிய குலப்பகுப்பும் மதவகுப்பும் ஒற்றுமைக்கு உலைவைத்துவிடும் — இனத்தை உடையச் செய்துவிடும் என்னும் கருத்துக்கள் பெறுமாறு பல பதிவுகளையும் உரிய இடங்களில் பதிவுசெய்கின்றார்! "விலங்குகளுக்குள் — இவ் வகை வேற்றுமை பாராட்டும்

பொல்லாப் பகுப்புகள் இலவே!" என்னும் கருத்தை இக் கதைப் பாவியத் தலைவியாகிய தாய்க்கழுதை மற்ற விலங்குகளிடம் விளக்கியுரைத்து எள்ளுவதாக அமைத்துள்ள பாங்கும் — மிக அருமை சான்றது! அவை, இவை!......

1. "மக்களென்பார் தங்களையே மாய்த்துவிடும் காலமிது!
ஒக்க அவரினத்துள் ஒற்றுமைக்கு வாய்ப்பில்லை!
கோடிக் குலம் பகுப்பார்; கோடி மதம் வகுப்பார்!
*(450-452)*

2. "எல்லா உயிர்க்கும் பிறப்பொக்கும் என்று கற்றீர்
கல்லாத எங்களுக்குள் காணாத வேற்றுமைகள்
பொல்லாக் குலச்சண்டை போட்டுடைத்துக் கொள்கின்றீர்!"
*(1277-1279)*

**எல்லாம் அவரால்தாம்!...... (எவரால்?!..... பார்ப்பாரால்!......)**

ஆரியர் வருமுன் வெறுமனே — தொழிற்குலங்களாக மட்டும் பிரிவுற்று இன அடிப்படையில் இயல்பாக மனம் ஒன்றியிருந்த இத் தமிழினம் — அன்னார் காலடி யெடுத்து வைத்த காலந்தொட்டு, மேல்கீழ் என்னும் கீழ்மைப் பகுப்புகளைப் பற்றிக் கொண்டு பாறுமயிர்ச் சிதறலாகக் குலைவுற்றுக் கிடக்கின்றமையை வரலாற்று அடிப்படையில் உணர்ந்திருந்த பாவலரேறு ஐயா அவர்கள்—சிறார்க்கான இப் பாவியத்துள் அன்னாரையும் — அவர்களின் கீழ்மை நிலைகளார்ந்த செயன்முறைக ளையும் நம் தமிழ்ப் பிஞ்சுகள் அறிந்துகொள்ள வேண்டும் என்னும் உள்நோக்கத்துடனேயே மிக அருமையுற அமைத்திருக்கின்றார்! தாய்க் கழுதைக் கூற்று...... இது!

'பார்ப்பார்'என் றோரினத்தைப் பார்த்திருக்க மாட்டாய் நீ!
ஊர்ப்பால் வருந்துயரம் எல்லாம் அவரால்தான்! (470-471)

.................................................................................................................

காணாக் கடவுளுக்கே 'காவலர்யாம்' என்றுரைப்பார்!
தெய்வப் பிறவியென்பார்; தீண்டிவிட்டால் தீட்டென்பார்!
பொய்புளுகு மூட்டைப் 'புராணங்கள்' பாடிடுவார்!
'சாத்திரங்கள்' பேசிடுவார்; 'சாதி' குலம்வகுத்தார்;
நாத்திறத்தால் ஏய்ப்பார்; நடிப்பால் பிழைத்திடுவார்!.....
(475-478)

என்பனபோலும் பார்ப்பனரைப்பற்றித் தோலுரித்து வைத்துள்ள வரிகள் —வளரும் நம் தமிழிளங்குமுகம் மறவாது தம் நெஞ்சகத்திற் பதித்துக் கொள்ளவேண்டிப் படைத்துள்ள அரிய வரலாற்றுப் பாடற்பாடப் பகுதிகள் ஆகுவன!

**உரிமை!......**

தமிழ்மொழி — தமிழின — தமிழ்நாட்டு உரிமைகளுக்காகவும் அவற்றின் விடுதலைக்காகவும் முப்பத்தைந்தாண்டுக் காலக் கொள்கை முழக்க அரிமாவாகவும் — அவற்றிற்கான ஈகத்தோடுகூடிய செயலாண்மையராகவுமே நம் ஐயா அவர்கள் வாழ்க்கையை நடத்தியவராகையால் — குழந்தைகளுக் கான, சிறார் சிறுமியர்க்கான கதைப் பாவியம் படைக்கும் இம் முனைப்பு வினைக்குள்ளும் இடையிடையிலாக அவ் வுரிமை விளக்கங்களையும் விடுதலை வேட்கும் வீச்சுக்களையும் இயல்பாக ஊடாட விட்டுள்ளமையையும் நாம் காணுகின்றோம்!

ஆற்றுவெளுப்பாரின் அடக்குமுறைக்கு ஆட்பட்டுக்

கிடக்க விருப்பமிலா அக் கழுதையும் அதன் குட்டியும் — காளையுடனாக நாட்டைவிட்டுப் புறப்பட்டுக் காடு நோக்கிச் சென்றமை — உரிமை வேட்கையில்தான் என்னும் கருத்துக் குறிப்புக்கள் — குட்டிக் கழுதையின் கூற்றுகளில் பதிவுற்றுள்ளன.

காண்க: 1. "நல்லுரிமை நாடி நடந்தலைந்து" (1759)

2. "அன்னவொரு கூட்டத்தை ஆழ வெறுத் தொதுக்கித்
தன்னேர் உரிமைக்குத் தான்துணிந்து பாடுபட்டார்"
(1779-1780)

(எல்லா உரிமைகட்கும் மேம்பட்டது வாழ்வுரிமை என்னும் கருத்துப்பெறக் குட்டிக் கழுதை ஆற்றிய உரையாக.....)

காண்க: 3. வாழப் பிறந்துவிட்ட வல்லுயிர்கள் அத்தனைக்கும்
சூழும் நலன்களிலே சொத்துரிமைக் கும்மேலாய்
உள்ளதெது? வாழ்க்கை உரிமையன்றோ? அவ்வுரிமை
தள்ளப் படும்பொழுதில் தான்வாழ்தல் கீழ்மையன்றோ?
(1781-1784)

**பெண்ணுரிமை:**

பெண்ணொருத்திக்குத் தன் கணவனைத் தானே தேர்ந்தெடுத்துக் கொள்ளும் உரிமையினைத் தர வேண்டும் என்பது, வாழ்வியல் முறைமை பற்றிய அவரின் கொள்கையாகவே இருந்தது. பெண்ணுரிமைக் குரியதாகத் தாம் கொண்டிருந்த நயன்மையுணர்வைப்

—பறவைபற்றிக் கூறும் ஓரிடத்திலும் — தன் மகளாகிய சேய்க் கழுதைக்கு எப்படி வாழ்வமைத்துத் தருதல் வேண்டும் என்று தம்மோடு நட்புகொண்ட காளையிடம் தாய்க்கழுதை விளக்கி நிற்கும் பிறிதோரிடத்திலும் — நம் ஐயா அவர்கள் பதிவு செய்துள்ளமை — கூர்ந்து கவனித்தற்குரியது!

காண்க: 1. "காந்தும் இளமையெழும் கன்னிப் பருவத்து, ஓர்
ஆண்பறவை கண்டே அளாவி மணஞ்செய்து"
(20-21)

2. "அன்புள்ளங் கொண்டுஅவளை ஆளாக்கித்
தான்விரும்பும்
ஆளனிடம் ஒப்படைப்பீர்!"............ (766-767)

**விடுதலை!.....**

"நம்பும் விடுதலைக்கே நாட்டமுறும் வல்லுயிரை
வெம்பசிதான் என்செய்யும்? வெந்துயர்தான் என்செய்யும்?"
(636-637)

..........................................................................................

"துன்பவிருள் என்செய்யும்? தொல்லைமழை என்செய்யும்?
வன்பு மடவோர்தம் வல்வினைதான் என்செய்யும்?"
(642-643)

என்றவாறு வரும் வரிகளில் விடுதலையுணர்வின் உரப்பும் உரமும் உறுதியும் பதிவுசெய்யப் பெற்றுள்ள மையைக் காணலாகும்!

**நாட்டுணர்வு!.....**

இக் கதைத் தலைவியாகிய தாய்க்கழுதை— அரிமா

வின் விருப்பத்தால் காட்டுக்கே அமைச்சராகப் பதவி யேற்ற பின்– கான்விலங்குகளிடையே உரையாற்றுகையில்–

**"தீங்கிறந்த நல்லுளத்துத் தென்னாட்டுப் பெண்கழுதை" (1172)** என அதனை ஆசிரியர் குறிப்பிடுமிடத்தில் வரும் "தென்னாடு" எனும் அடைமொழியுள் — தன் நாட்டுப் பெருமிதவுணர்வைப் பதித்துவைத்துள்ள தனிஇ அழகு — அவரின் கொள்கையொடு பொருத்திப் பார்க்க வேண்டிய கூறேயாகும்!

## கழுதைகளுக்கான பெயரீடுகளிலும் தூயதமிழ்!.....

இக் கதையுள் வரும் காளை, தனக்குத் தொடர்புடைய பிறிதொரு ஆண்கழுதையைப் பற்றி இக் கழுதையம்மை யிடம் கூறுகின்றது! அக் கழுதையின் பெயர் "வேங்கை" (394) என்றும் — அக் கழுதைக்குத் தந்தையின் பெயர் "பொன்னான்" (393) என்றும் — அப் "பொன்னான்" எனும் கழுதையின் மனைவியினுடைய பெயர் "பூவாய்" (393) என்றும் அதனதற்குமுரிய பெயர்களாக அது அறிவிக்குமிடங்களில் — விலங்குகளுக்குரிய பெயரீடுக ளையுங்கூடத் தூய தமிழ்ப் பெயர்களாகவே அமைத்துள்ள போக்கிடையில் நம் ஐயா அவர்களின் கொள்கை நோக்கக் கடைப்பிடியையே நம்மால் காணவியல்கின்றது!...

## துணையிலையேல் வினை சிறவாது!....

கொள்கையாளன் ஒருவனுக்குத் துணைவலிவு என்பது இன்றியமையாததாகும். அன்றேல் — அவனின் வினை சிறவாது—விளைவும் பரவாது என்னும் கருத்தைத் தம் தொண்டர்கள் யாவரிடத்தும் அடிக்கடி வலியுறுத்தி அதற்கெனத் தொடர்ந்து வேண்டுகோள்களிட்டே இறுதி வரை நொந்துவந்த நைந்த நெஞ்சினராகிய நம் ஐயா

அவர்கள் — இக் கதைப் பாவியத்தின் ஓரிடத்திலும் அதனைப் பதித்துவைத்துள்ளமைகண்டு நம் நெஞ்சும் வேகின்றது; குமுறுகின்றது!.... அவ்வேக்கப் பெருமூச்சின் சாரல் வீச்சாகவே அவரின் அவ்வரி பளிச்சிடுகின்றது!....

"........................................ ஆடவரே என்றாலும்
வானளவு பேராற்றல் வாய்த்தவரே என்றாலும்
துன்னத் துரும்பும் துணையாகக் கொள்ளாரேல்
சின்ன வினையேனும் செய்தற் கியலாரே" (797-800)

என்பது, அந் நெட்டுயிர்ப்பு வரியாகும்!

**கொள்கைவாழ்க்கையில் துயர்!.....**

துன்பம் — துயரம் — இடுக்கண் — எள்ளற்பேறு —ஏச்சுகள் என்றவாறான அடுக்கு இக்கட்டுகளிலேயே இம் மண்ணில் துவண்டநிலையிலும் செம்மாந்த தம் கொள்கை வாழ்க்கையில் திறம்பாது நேர்கின்ற நம் பாவலரேறு ஐயா அவர்கள்—எதிர்காலத்தில் தம்போலும் ஈடுபடவரவுள்ள கொள்கையாளர்க்குரிய எய்ப்பில் வைப்பாக — அக் கொள்கைகளுக்கெனப் படுந் துயரம் — மிகப் பெருமை சான்ற துயரமாகும் என்கின்றார், இக் கதைப் பாவியத்துள்!.... ஓராயிரம் துயரங்களிற்கூட அக் கொள்கையாளன் மிதக்கலாம்! அத் துயர்மிதப்பு மேன்மை சான்ற மிதப்பே என்னுமிடத்தில் — அவரின் கொள்கை வரலாற்றுப் போக்கு அடங்கிய வாழ்க்கையும் — அதில் அவர்கொண்டிருந்த வல்லுறுதியும் தெளிவுமே நமக்கு விளங்குகின்றன!

அவை — வருமாறு:

"ஆன்ற துயர் அத்தனையும் ஆய்ந்தறிந்தால் கொள்கைக்குப்
பட்டதுயர் போல்பெருமைப் பட்டதுயர் இல் எனலாம்!"

"திட்டமிட்டுஓர் கொள்கையினைத் தேர்ந்துகொண்டோர்
ஈங்கதனை
ஒக்க செயற்படுத்த ஓரா யிரந்துயரில்
மிக்க மிதந்தாலும் மேன்மையதற் குண்டெனலாம்!"
(1768-1772)

அருமணிப் பாமொழிகள்!.....

நூற்றுக்கும் மேற்பட்டு — அழகும் ஒளியும் சான்ற அருமணியன்ன கருத்துருக்கள் — இக் கதைப் பாவியத்துள் குவிந்துகிடக்கின்றன! கதைப் போக்கிடையில் அனைவரும் அவ் அனைத்தையும் சுவைத்துச் செல்லலாம்!.... எனினும், அவற்றுள் சில உருப்படிகள் உள்நுழைவுக்கும் முன்பாக — அரிய சான்றுகளாக உளங்கொளத் தக்கன! அவை, இவை!....

1. "......................................................................துன்பமென்ன
என்றும் இருப்பதுவோ? இன்றுவரும் நாளைசெலும்!
(819-820)

2. "துன்பில் துவளாமல் மேலும் துணிந்திருந்தால்
இன்பம் எதிர்ந்துவரும் இஃதே உலகவியல்" (823-824)

3. "நல்லுளமும் நல்லொழுங்கும் நற்றுணையாய்
வாய்த்துவிட்டால்
தொல்லுலகை வெல்வதற்கும் தோது பிறவாதோ?"
(803-804)

4. "எல்லார்க்கும் எல்லா நலமும் இயைவதென்றால்
இல்லார்க்கும் கேடில்லை; ஏய்ப்பார்க்கும் வாய்ப்பில்லை!"
(703-704)

5. "ஒப்பற்ற கொள்கை உழைத்துண்போம் என்பதுவே"
(1195)

6. “சொந்தப் படிப்பெல்லாம் சூழ்ச்சிக்கே தானுதவும்” *(1194)*

7. “பூட்டுக்குப் பொன்திறவு போட்டுத் திறப்பதனால்
   கொள்ளைஎன் றாகாதோ ?......................” *(545-546)*

8. “வெட்டுண்டு சாய்ந்தாலும் வீறுமிகக் கொண்டவர்முன்
   கோழையர்கள் என்று(ம்) மிகக் கோழையரே
   இவ்வுலகில்” *(936-937)*

9. “ஏழையர்முன் செல்வம் இழந்தவரும் செல்வரன்றோ ?”
   *(938)*

10. “கல்வியினால் தீமை கழன்றொதுங்க வேண்டாவோ ?”
    *(1281)*

11. “நல்விதையை ஊன்றினால் நச்சுக் கனிவிளைமோ ?”
    *(1282)*

**கதைப்பின்னுள் விதைப்புகள் !.....**

கதை சொல்லுவதற்கிடையில்—மாந்த நேயவுணர்வு வளர்ப்பு, — கொள்கைக்கென வாழும் சிறப்பு, — அக் கொள்கைக் கடைப்பிடிப்பிடையில் நேரலாகும் துயரங்களைப் பற்றிய புறக்கணிப்புப் போக்கு,— துன்பத்தில் துவளாது மேற்செல்ல உறுதிபெறுகை, — குமுக்கத்திலுள்ள புன்மை புரைகளை அறிந்து அவற்றை நீக்க முனைவதற்கான எழுச்சியூட்டம், — நம்மைச் சூழ்ந்துள்ள நிலைத் திணைகள், இம் மண்ணுக்கும் மேலாக விண்ணகத்தே பறந்துலவும் புள்ளினங்கள், கான்விலங்குகள் ஆகியவற்றின் பெயர்களைத் தெரிந்துகொள்ளத் தூண்டும் இயற்கை வாழ்வு பற்றிய தெளிவூட்டம், — உரிமை கோரல், — விடுதலை வேட்கை, — உவமைப்படுத்திப் பார்த்துத் துய்க்கும் மனவுணர்வுப் பேற்றுக்கான

ஈடுபடுத்தம், — திருத்தமான மொழி நடையறிவிப்பு, — சொல்லுக்குரிய நேரிய பொருளையுணர்ந்து பழக்கப் படுத்திக் கொள்வதற்கான அறிவுத் தோய்விப்பு — எனப் பலபடிகளான ஊக்கங்களை உள்ளோட்டமாக இப் பாவியத்துள் நம் ஐயா அவர்கள் அமைத்துத் தந்திருக்கும் பாங்கு — இப் படைப்பை நோக்கி வணங்குதற்குரிய உணர்வையே நம் உள்ளத்துள் உந்துகின்றது!.....

மிகப் பல இடங்களில் — அவரே நேரில் நம்மிடம் உரையாடுவதுபோன்ற பான்மையினையே நாம் காண வியல்கின்றது!

**ஆக்கத்துள் நோக்குங்கள்!.....**

இக் கதைப் பாவியக் கடலின் கரையோரத்தில், நாம் நம்மின் உள்ளக் கால்களைப் பதித்துநிற்கையில் — அத் தூய நெஞ்சத்தவரின் நேய நினைவலைகளால் சிலிர்சிலிர்ப் புறும் நிலையிலாக — அவை ஈர்க்கப் பெறுகின்றமை போன்ற தன்னுணர்வே நமக்கு ஏற்படுகின்றது! அலைக ளைக் கடந்து இக் கடலில் நீந்துகையில்—இதனகப் பட்ட அமைதியுள் நாமும் ஒன்றிநின்று உள்ளுவகையில் உலாவலுற மிதக்கின்றோம்! இனிமேல், நீங்களும் படியுங்கள் — மிதக்கலாம்!..... மிதவுங்கள் — பறக்கலாம்! ..... பறவுங்கள் — உயரலாம்!..... உயருங்கள்—உவக்கலாம்!

நம் உயர்வுக்காகவும் உவப்புக்காகவும் — நம் ஐயா அவர்கள் நமக்கெனத் தந்துசென்ற ஆக்கங்களில், இதுவும் ஒன்று!......

நம் ஆக்கமே — அவரின் நோக்கமாக இருந்தது!.....

இனி, நம் நோக்கமோ, — இவ் ஆக்கத்துள் ஆகட்டும்!....

**தஞ்சாவூர் – 5**
**20.6.'99**

அன்பு,
**ப. அருளி**

# கழுதை அழுத கதை

## இயல் : 1

என்ன பிறவியென்றே
என் வயிற்றில் நீபிறந்தாய்?

**பொங்கல்நாள் அன்று, ஊர்ப்**
**புறத்தே, புதைகாட்டில்**
**செங்கல் பெயர்ந்திடிந்த**
**குட்டிச் சுவரருகில்,**

## கழுதை அழுத கதை

ஆற்று வெளுப்பார்
அவிழ்த்துவிட, ஓடிவந்து
காற்றில்இளைப் பாறும்
கழுதைகள் ஆங்கிரண்டு
காட்டுக் குரலெழுப்பிக்
'காழ் காழ்' என் றோலமிட்டுப் 5
பாட்டாகப் பாடிப்
பழங்கதையை எண்ணி எண்ணி
ஆறாத் துயரால்
அழுது புலம்பியதை
மாறாமல் நின்று
மனம் வருந்திக் கேட்டிருந்தேன்!

ஆண்டு முதிர்ந்தே
அரைக்கிழமாய்ப் போன, ஒரு
கூன்கழுதை, முன்நின்ற
குட்டிக் கழுதையிடம்: 10

"என் அழகுச் செல்வமே!
என்மகளே! இப்பிறவி
என்ன பிறவியென்றே
என் வயிற்றில் நீபிறந்தாய்?

காட்டுப் பறவையாய்
நீ பிறந்தால் காணியெல்லாம்
பாட்டிசைத்துப் பாடிப்
பட்டுச் சிறகடித்து,

வான வெளியில்
　　வளைந்தபடி மேல்கீழாய் 15
ஆனபடி யெல்லாம்
　　அலைந்தலைந்து நீ பறந்து,
வெள்ளை முகிலுள்
　　புகுந்து விளையாடித்
துள்ளும் அருவியிலே
　　தோய்ந்து குளித்தெழுந்து,
பூந்தேனை மாந்திப்
　　புதுக்கனிகள் பார்த்துண்டு,
காந்தும் இளமையெழும்
　　கன்னிப் பருவத்து, ஓர் 20
ஆண்பறவை கண்டே
　　அளாவி மணஞ்செய்து
வான்தோயும் கூடுகட்டி
　　முட்டையிட்டு வாழ்ந்திருந்து
குஞ்சு பல பெற்றுக்
　　குலந்தழைக்க வாழ்ந்திருப்பாய்!
கொஞ்சமன்று இன்பம்!
　　கொடிகொடியாய்ப் பூத்திருக்கும்.

செஞ்சொல் கிளியாய்,
　　சிறுகுருவி, வெண்புறவாய், 25
அஞ்சொல் குயிலாய்,
　　அழகு மயிலுருவாய்,
காடையாய், வெண்கொக்காய்,
　　காட்டு மணிப்புறவாய்,

பேடைப் பருந்தாய்,
    பெருங்கழுகாய், வல்லூறாய்,
சிச்சிலியாய், தேன்சிட்டாய்,
    செம்போத்தாய், தூக்கணமாய்,
மெச்சுகின்ற நாகணமாய்,
    காகமாய், உள்ளானாய், 30
வாலனாய், ஆந்தையாய்,
    வானம்பா டிப்புள்ளாய்,
ஆழ்கடலில் வட்டமிடும்
    ஆலாவாய், நாரையாய்,
கான்கோழிப் பேடாய்,
    கரிக்குருவி, கோட்டானாய்,
வான்கோழி, மொங்கானாய்,
    வல்வாய், எகினமாய்,—

—இன்னும் பெயர்சொல்ல
    ஏலா திருக்கின்ற 35
எண்ணற்ற புள்ளினத்தில்
    ஏதோ ஒரு பிறப்பாய்
நீ, பிறந்தால், இந்த
    நிலையில் இடுப்பொடிய,
ஆவி கழல,
    முதுகுஅகலக், கால்ஒடிய,
ஊரார் மதிப்பாய்
    உடுத்தி அழுக்காக்கிப்
போராய்க் குவிக்கும்
    பொதிசுமக்க வந்திருக்காய்! 40

வண்ணப் பறவை
  வகைகளிலே வான்திரியும்
சின்ன ஒருபுள்ளாய்த்
  தோன்றி யிராவிடினும்,
குன்றில் விழுந்திறங்கிப்
  பாறை குடைந்தெழுந்து,
நின்ற நெடும்பனைபோல்
  நீளக் குதித்துவந்து,
வெள்ளை மணற்பரப்பில்
  விரிந்து நடைபயின்று, 45
கொள்ளைப் பெருங்கடலைக்
  கூடுதற்கே ஓடுகின்ற
ஆற்றுக்குள் நீரில்
  அலைந்து விளையாடி
ஊற்றில் உடல்புரண்டே
  ஓடிவரும் மீன்குஞ்சாய்
நீ, பிறந்து வாழ்ந்தாலும்
  நின்துயரம் காணேனே!

மேவும் கழுதையென
  மேனி எடுத்துவிட்டாய்! 50
இம்மா நிலத்தில்
  இருக்கும் பிறவிகளில்
அம்மாவோ, நம்பிறவித்
  துன்பத்தை ஆர்படுவார்?

நாய்ப்பிறவி பெற்றாலும்
 நல்லதென்று சொல்வேன், நான்!
வாய்ப்பென்ன! கொஞ்சும்
 வகையென்ன! மேன்மையென்ன!

அண்டியவர் தம்மிடத்தில்
 அன்புகொஞ்சம் காட்டிவிட்டால் 55
உண்டிக்குப் பஞ்சமா?
 உண்பதுவும் நெய்யன்றோ?

பட்டுமெத்தை போடாரோ?
 பால்பழத்திற் கென்னகுறை?
கிட்டும் அதிகாரம்
 கேட்கத்தான் வேண்டுமோ?

வீட்டுள் மிகக்குளிர்ந்த
 மெத்தையிலே கைகால்கள்
நீட்டிப் படுத்து
 நெடுநேரம் தூங்குவதும், 60

வீட்டுத் தலைவி
 தலைவர் வெளிச்சென்றால்,
ஆட்டமிட்டுப் பின்னால்
 அழகுத் திருவாலை
மெத்தப் பெருமையொடும்
 ஆட்டி மிகநிமிர்ந்தே

ஒத்தநடை போட்டே
    உலாவிவரச் செல்வதுவும்,

பட்டுமயிர் தொங்கிப்
    பளபளக்கும் மேனிக்குக் 65
கட்டிச் சவர்க்காரம்
    மூக்கு கமகமக்கப்
போட்டுக் குளிப்பாட்டிப்
    பூங்கழுத்துப் பட்டியிட்டு,
சேட்டுக் குழந்தைபோல்
    சீராட்டிப் பாராட்டிக்
கொஞ்சி வளர்க்கப்
    படுவதுவும் கூறுவதோ ?

பஞ்சையினும் பஞ்சைகளாய்
    பாழும் பழுதைகளாய் 70
வந்து பிறந்தோம்;
    வயிற்றுக் குணவுண்டா ?
வெந்து புழுங்குவதைச்
    சொன்னால் விளங்கிடுமோ ?

தூக்கு தூக் கென்று, நம்
    வாழ்க்கையெல்லாம் தூக்கிடினும்,
ஏக்கத்தைக் கேட்டு, ஆர்
    இரங்கியொரு சொல்சொல்வார் ?

காலை இழுத்துவந்து,
    கால்கட்டி, வால்கட்டி, 75

ஆலைப் பொதிபோல்
அழுக்குப் பொதிநான்கைத்
தூக்க முடியாமல்
தூக்கிவந்து மேல்வைப்பார்.

தேக்கிவைத்த கண்ணீர்
திரையிட்டுக் கண்மறைக்க
முட்டிநடை போட்டு,
முதுகொடிந்து போகுமாறு—
எட்டிநடை போட்டபடி—
ஏரிக்கோ ஆற்றுக்கோ 80
போனால், பொதியிறக்கிப்
'போ' வென்றே ஓட்டிடுவார்!

ஆனான மட்டும்
அலைந்தால்தான் மாலைக்குள்
கால்வயிற்றுப் புல்கிடைக்கும்;
கம்பங்கூழ் ஏன்கிடைக்கும்?
பால்வற்றிப் போன
மடியைப் பறித்திழுத்தே,
ஏமாறிப் பாலுக்கே
ஏங்கித் தவித்ததெல்லாம் 85
தாமாறிப் போகுமா?
தாய்மனம் என் பாடுபடும்?

மேற்கே கதிர்மறைய
மீண்டும் பொதிசுமந்து

கால்குடைய, தோளும்
    கனகனக்க வீடுவந்தால்,
மூட்டை யிறக்கிவிட்டு
    முன்கால்கள் கட்டிவிட்டே
ஓட்டி விடுவார்;
    உறங்கிடலாம் என்றிருந்தால் 90
தூக்கம் வருமா?
    தொடைவலியும் தீர்ந்திடுமா?
நாக்கு வறளும்;
    அடிவயிறு நன்கெரியும்!

மொத்தையாய் நான்கைந்து
    மூட்டை சுமந்தாலும்
செத்தை, சருகன்றித்
    தின்பதற்கே என்னஉண்டு?

ஆவி மகிழ்ச்சியுற
    நீ, பிறந்தாய் ஆனாலும் 95
தாவி யணைத்திடவே
    தாய்நான் நினைத்தாலும்
சின்ன உளம்பெற்ற
    சீர்அறியா மக்களிடம்
என்னபயன் கண்டோம்?
    எழில்மகளே! இன்னும் கேள்:



# இயல் : 2

எச்சில் பிறவியடி!
ஏக்கமுறும் வாழ்க்கையடி!

"மக்கள் என்ற பேராலே
வாழ்ந்துவரும் மாந்தரிடம்
தக்கபடி மண்டியிட்டு
வாழ்ந்து மடிவதுவே 100
இக்கொடிய பாரில்
எமக்கிட்ட வாழ்க்கையென

அக் கொடிய ஆண்டவனும்
ஐயோ படைத்துவிட்டான்;

நாளும் பிறக்கின்றோம்;
நாளும் இறக்கின்றோம்;
நீளும் துயர்வாழ்க்கை
நிற்பதுதான் என்றைக்கோ?"

என்று பலவாறாய்
எடுத்துரைத்துத், தாய்க்கழுதை 105
முன் நின்ற குட்டி
முகத்தில் முகம்வைத்துக்
கண்ணீர் சொரிந்தபடி
கால்வலிக்க நின்றழுது
மண்ணில் அமர்ந்து
மனம்வருந்திக் கொண்டிருக்கும்
வேளையிலே,

எங்கிருந்தோ
வெள்ளை நிறம்வாய்ந்த
காளை மா டொன்று
கழுத்து மணியசைய 110
அங்குவந்து சேர்ந்தே
அதிரும் குரலெடுத்தே
எங்கும் நடுங்க
இடிமுழக்கம் இட்டதுகாண்!

இட்ட முழக்கால்
எதிரில் அமர்ந்திருந்த
பெட்டைக் கழுதை
பிடரி நடுநடுங்கக்
குட்டி தனையணைத்துக்
கொண்டபடி, காளையினை 115
எட்டி யிருந்தே
இருவிழியால் நோக்கிற்று:

"நீண்டு நிமிர்ந்தவுடல்;
நெட்டைக் கால்கள் நான்கு!
கூண்டுபோல் நின்ற
குமிழ்ஒன்று! நீண்டவால்!
ஈட்டிகள்போல் கொம்பிரண்டு!
ஏறெடுத்த நல்லநெற்றி!
தீட்டிவைத்த கட்டாறி
போல்திகழும் காதிரண்டு! 120

வெள்ளைத் திருமேனி!
வீங்கியுள்ள நீள்கழுத்து!
கொள்ளை அழகுமுகம்!
கூர்த்தகன்ற கண்ணிரண்டு!
சால்போன்ற நல்வயிறு!
சாணைக்கல் போல்நாக்கு!
கோலக் கழுத்தில்
குலுங்கும் தசைத்திரளை!
நன்றாய்க் கறுத்தே
ஒளிதெறிக்கும் நல்மூக்கு! 125

நின்றால் அழகு!
நடந்தால் மிகஅழகு!
பாராளும் வேந்தன்போல்
பட்டாளக் காவலன்போல்
நேர்நிமிர்ந்த வீறுநடை!
நெட்டுநெளி யாமுதுகு!
என்னே! அடடா!
இதனழகு கொள்ளை! கொள்ளை!!
இன்னபடி யன்றோ
பிறவிஎடுத் தல்வேண்டும்!" 130

—என்றபடி தாய்க்கழுதை
ஏக்கப் பெருமூச்சாம்
ஒன்றைத்தான் குட்டி
முகங்கருக விட்டதுகாண்!

மூச்சு முகம்படவே,
குட்டி முகந்திரும்பி,
"பேச்சற்று, ஏன் அம்மா
பெருமூச் செறிகின்றாய்!
இக்காளை மாட்டினால்
ஏதும் துயர்வருமா? 135
பக்கம் வருமுன்னே
ஓடிப் பதுங்குவமா?"
— என்றே வினவிற்று:

இதுகேட்டுத் தாய்க்கழுதை,
ஒன்றுக்கும் அஞ்சாதே!
ஒடிடவும் தேவையில்லை;
இக்காளை மாட்டிற்(கு)
இருக்கும் அழகைப்பார்!
முக்காலும் அந்த
முகம்நமக்கு வாராதே! 140

ஈரம் பிசுபிசுத்த
தோலும் திரிதிரியாய்
நாரத்தங் காயின்
நடுநார்போல் மேனியெங்கும்
தொங்கும் பழுத்த
மயிர்த்திரளும், தொய்முதுகும்,
தங்கும் அடிபெருத்த
தாழி எனவயிறும்,
முட்டியிடு காலும்,
முழம்நீண்ட காதுகளும், 145
குட்டைக் கழுத்தும்
குறுஉடலும் வெள்ளுக்கும்,

பாழ்மிகுந்த வாயைப்
பிளந்து குரலெடுத்தால்
'காழ்காழ்'என் றோலக்
கனைப்பும், பெருமூச்சும்,
தூ! தூ! தூ! என்னஇது
தோற்றமா? வீண்பிறப்பா?
ஏதுமற்ற வாழ்க்கை!
எதைநினைந்து நாம்மகிழ? 150

நம்மை இறைவன்
　　நடுநிலைஇல் லாப்பொழுதில்
வெம்மை மனத்தோடு
　　வீற்றிருக்கும் வேளையிலே,
எல்லா விலங்கினையும்,
　　எல்லா எழிலோடும்
எல்லா நிறத்தோடும்
　　ஏற்றமுறத் தோற்றியபின்,
மிச்சம் மிகுந்த
　　நிறத்தை அழகையெல்லாம் 155
எச்சமறக் கூட்டி
　　இருகையால் தான்பிசைந்தே
அச்சில்லா வார்த்த
　　அழகில்லாத் தோற்றமடி!
எச்சில் பிறவியடி!
　　ஏக்கமுறும் வாழ்க்கையடி!

தோற்றம் இழிவு!
　　துவள்கின்ற வாழ்வுஇழிவு!
ஆற்றும் பணியிழிவு!
　　ஐயோ! இழிவு! இழிவு! 160
வாளில்லை; இல்லையெனில்
　　வாழ்வை முடித்திருப்பேன்!
கேள்நன்றாய்! இன்னும்
　　கிளத்துகின்றேன் என் மகளே!

"இக்காளை மாட்டுக்(கு)
　　இருக்கும் பெருமையிலே

ஒக்கவே ஆயிரத்தில்
  ஒன்றா கிலும் நமக்கு
வாய்த்திருக்கு மானால்
  வளர்மகளே! நம்வாழ்க்கை 165
காய்த்துக் குலுங்கும்
  கனிமரமாய் நின்றிருக்கும்!
பூத்துக் குலுங்குகின்ற
  பூச்செடிபோல் வாழ்விருக்கும்!

காத்துக் கிடக்கின்ற
  பட்டாளக் காவலிடைத்
திண்கால் அரியணையில்
  தேர்ந்தஅறி வாளரிடை
வெண்குடைக்கீழ் வீற்றிருக்கும்
  வேந்தனைப்போல் நானிருப்பேன்! 170

அப்பெருமை என்ன?
  அருமையென்ன? நாம்பெற்ற
இப்பாழ் பிறவிபோய்
  ஏழ்பிறவி கண்டாலும்
மாடாய்ப் பிறக்குமொரு
  மாண்புவந்து வாய்த்திடுமோ?
வாடாத மேனியுடன்
  வாழ்ந்திருக்க மாட்டோமா?"

— என்றபடி தாய்க்கழுதை
  ஏங்கிடவும்; குட்டியோ, 175
"என்னதான் அப்பெருமை?"
  என்றே வினவிற்று.

"என்னவென்றா கேட்கின்றாய்
நீ, சிறுபெண்; ஏதறிவாய்?
ஒன்றுநான் முன்னர்
உரைக்கின்றேன்; உற்றுக்கேள்:

பச்சைப் பசும்புல்லை
உண்டு, நல்ல பாலாக்கி
இச்சிச் செனமாந்தர்
எல்லாரும் உண்டிடவே, 180
மாட்டினத்துப் பெண்கள்
மடிநிரம்பச் சாய்ப்பதினைக்
கேட்டிருப்பாய்; சிற்சிலகால்
கண்ணாலும் கண்டிருப்பாய்!

நாமுந்தாம் புல்லுண்போம்;
நம்பாலை யார்குடிப்பார்?
'ஊம்'என்று கேள்நீ?
உனக்குப் புரிகிறதா!
நம்பிறவி தாழ்ச்சியென்று
நானிலத்தார் எண்ணிவிட்டார். 185
'இம்'என்று கேட்டுவா!
இன்னும் பலசொல்வேன்!

புல்லுண்ட மாட்டின்
பொதபொதக்கும் சாணியைப்போய்
மெல்லென்னும் பூங்கையால்
மேனி சிலிர்க்காமல்
நீரில் கரைத்து
நெடுமுன்றில் வாயிலெல்லாம்

தீரத் தெளிக்கின்றார்
　　பெண்கள்; தெரிந்திருப்பாய்! 190
ஆனால் இதுபற்றி
　　ஆராய்ந்து பார்த்தாயோ?
ஏன்அதுபோல் நம்மின்
　　எருவைக் கருதவில்லை?
நம்பிறவி மட்டமென்று
　　நாட்டுமக்கள் எண்ணிவிட்டார்.

'இம்'என்று கேட்டால்தான்
　　பேச்சில் இனிப்பிருக்கும்.

மாட்டுப் பிறவி!
　　மதிப்பான ஓர்பிறவி 195
வீட்டிலுள்ள செல்வமென்றும்,
　　தெய்வமென்றும் மக்களெல்லாம்
போற்றிப் புகழும்
　　புகழ்ச்சியிங்கு யார்க்குண்டு?
காற்றுவழி யாலும்நம்
　　காதில் விழுவதுண்டோ?

நூற்றுக் கணக்காய்
　　மாட்டை விலைகேட்பார்!
தூற்றி 'இருபதுக்கே
　　தோதுபடோம் நாம்' என்பார்! 200

ஆண்டுக் கொருநாள்
　　அதற்கென்று பொங்கலிட்டு,

நீண்டுயர்ந்த கொம்புகளைச்
    சீவிமிகக் கூராக்கி,
வண்ணமிட்டுக் கொப்பியிட்டு
    வார்த்தமணி மாலையிட்டுக்
கிண்கிணியும் கட்டிக்
    கிழமாடே ஆனாலும்
பாராட்டிக் கொண்டாடும்
    பாங்கைஎங்கும் கண்டிருப்பாய்? 205

சீராட்டி நம்மை
    ஒருநாள் குளிப்பாட்டும்
நல்லஒரு மாந்தனையும்
    நாம்கண்ட தில்லையே!
தொல்லைதரா நாள்இருப்பின்
    நமக்குத் திருநாளே!

பொல்லாத பிள்ளைகள்முன்
    போய்விட்டால் போதுமே!
எல்லார்க்கும் நாமே
    இளைக்காரம் என்பதுபோல் 210
ஒட்டைத் தகரத்தை
    ஓர்பையன் வால்பிணிப்பான்!
மூட்டைப் பொதிபோல் ஓர்
    மூடன் முதுகமர்வான்!
ஓட்டுஒட் டென்றுஒருவன்
    கால்கட்டி ஒட்டிடுவான்!
ஆட்டமென்ன? பாட்டென்ன?
    ஆலோலக் கொட்டென்ன?

மூச்சுமுட்ட, கால்களெல்லாம்
முட்டுடையத் தோல்கழலக் 215
காச்சுகாச் சென்று
குரல்வற்றிக் கத்திடினும்
வேடிக்கை கண்டே
விலாவலிக்கத் தாம்சிரிப்பார்
ஓடிக்கை நீட்டி
உயிர்மீளச் செய்பவர்யார் ?

ஏன்இதுபோல் நம்மேல்
இரக்கமிலை; எண்ணினையா ?
ஊன்பிறவி தன்னில்,நாம்
ஊத்தைப் பிறவியடி ! 220

'இம்'மென்று கேள்நீ !
இதற்குமொரு தோதுசொல்வேன் !
அம்மா !நான் உன்னை
அரசாளச் செய்திடுவேன் !"
—என்று கழுதை
பலவாய் மனமிடிந்து
நின்றதன் குட்டியிடம்
நீள உரைத்ததுவே.

குட்டி குறுகுறெனக்
கூழை முதுகிட்டே 225
ஒட்டிக் கிடக்குந்தன்
தாய்மடியில் வாய்வைத்துச்

சப்புச்சப் பென்றுவாய்
சப்பிச் சலித்துவிட்டே,

"இப்பொழுது சொன்னாயே,
என்னை அரசியென
ஆக்குவேன் என்றாயே,
அப்படிஎன் றால்என்ன ?"
என்று வினவிற்று !

ஏக்கமுறத் தாய்க்கழுதை, 230
"என்னவென்றா கேட்கின்றாய் ?
என்னவென்று நானுரைப்பேன் !

பொன்னும் பொருளும்
புதுப்பட்டுச் சேலைகளும்
மின்னும் அழகிருக்கும் !
மேனி பளபளக்கும் !
மஞ்சள் குளிப்பிருக்கும் !
மாண்பு மிகுந்திருக்கும் !
துஞ்சும் படுக்கையெலாம்
தூசகன்ற பஞ்சுமெத்தை ! 235
கொஞ்சலென்ன ! கூத்தென்ன !
கோடி வணக்கமென்ன !

பஞ்சை வயிற்றுக்குப்
பாலென்ன ! சோறென்ன !
காய்ந்த அறுகம்புல்,
கண்டுவந்த நீயினிமேல்

வாய்ந்த உணவையெலாம்
  வாயினிக்கத் தின்றிடுவாய்!
இன்னும் பலவிருக்கும்!
  ஏனோ வெறும்பேச்சே! 240

என்னோடு வா,நீ!
  இதோநிற்கும் காளையிடம்
சென்று நலங்கேட்போம்."

— என்றே கழுதைத்தாய்
முன்னர் நடந்திடவும்
  குட்டியதன் பின்நடக்கும்!



## இயல் : 3

காளை அரசே!
கழுதை வணங்குகின்றேன்!

**காளையிடம் வந்து,**
**கழுதை கனைப்பெழுப்ப,**
**தோளைக் குலுக்கிவிட்டுத்**
**தொங்கும் கழுத்தசையக்** **245**
**காளை எரிவிழியால்**
**வந்த கழுதைகளை**

மேலிருந்து கீழாகக்
கீழிருந்து மேலாகப்
பத்துமுறை நோக்கிடவே,
குட்டி பதைபதைத்து,
"செத்துத் தொலைந்தோம்"என்
றெண்ணத்தால் செத்தபடி
தாய்க்கழுதை காலடியுள்
தன்னைப் பதுக்கியது. 250

வாயெடுக்க வாராமல்
வந்த பெருங்கழுதை
ஈரல் குலைநடுங்க
உள்ளெலும்பு தான்குளிர,
ஆர இருந்தே,
உடலை அனலேற்றித்
துண்துளியாய் அச்சம்
துடைத்துத் துணிவடைந்து,
மண்தரையைப் பின்காலால்
எற்றி மறங்காட்டி, 255

"நீங்கள் நலமென்றே
யானும் நினைக்கின்றேன்.
ஆங்கொருநாள் உங்களையே
ஆல மரத்தடியில்
கண்டிருக் கின்றேன்; நான்!
ஆனால் பழக்கமில்லை.

விண்டுரைப்ப தொன்றா, உம்
வீங்குகின்ற தோளழகும்,

குத்திட்டு நிற்கும்
திமிலழகும், கொம்பழகும்! 260
எத்திக்கும் உங்கள்
எழிலை வியந்துரைப்பார்!

காளை அரசே!
கழுதை வணங்குகின்றேன்.
வேளை சரியோ,
சரியிலையோ நானறியேன்—"

— என்று நயமாய்
இரும்புளமும் வெண்மெழுகாய்
நின்றுருகி நீராய்
நிலைகுலைந்து போமாறு 265
மென்று விழுங்கி
மொழியைக் குதப்பிற்று!

பெண்கழுதைப் பேச்சு
பெருங்காளை மாட்டுக்குக்
கண்கவரும் பச்சைப்
பசும்புல் வெளிபோலும்,
செங்கரும்பு போலும்,
செறிந்ததொரு கோடையிலே
பொங்கும் நுரைத்த
புளிநீர் மணம்போலும், 270
காவிரி நீரில்
உடல்குளித்த வாறாயும்
ஆவி உருகிடவே
மாலையிலே ஆற்றிடையில்

ஏறத் தொடுக்கும்
இடையன்தென் பாங்கு—எனவும்,
ஐம்புல இன்பத்தை
அள்ளித் தெளித்ததுவே!—
நம்பினால் நம்புங்கள்—
காளையுடல் நாணிற்று! 275
நாணிநின்ற காளை
கழுதை நலங்கேட்ட
பாணியினை எண்ணிப்
பலவாய் மகிழ்ந்தபடி,

"வா, கழுதை அம்மையே!
வாழ்க்கை நலந்தானே?—
ஆகா, உன் பிள்ளை
அரபிக் குதிரைபோல்
தோற்றமளிக் கின்றாளே!
துள்ளும் துடுக்குப்பெண்!— 280
ஆற்றுப் படுகை
மணல்போல் உடலழகு!
அப்பனையே ஒத்த
அழகுப்பெண்! — போகட்டும்
ஒப்பரிய நின்கணவன்
உடலம் நலந்தானே!"

— என்றுமிக அக்கறையாய்க்
காளை வினவிற்று!

நின்ற கழுதைதன்
நீண்ட செவிகளிலே— 285

அன்புக் கணவனெனும்
    அச்சொல் விழுந்தவுடன்,
மின்சாரம் பாய்ந்ததுபோல்
    மேனி சிலிர்சிலிர்க்க,
மண்சார மற்ற
    மரமற்று வீழ்வதுபோல்,
பொத்தென்று கீழே
    பொதிபோல் விழுந்ததுவே!

வீழ்ந்தவுடன் காளைக்கோ
    ஒன்றும் விளங்கவில்லை! 290

ஆழ்ந்த துயரத்தால்
    குட்டி அதிர்வடைந்து,
செய்வ தறியாமல்
    தாயுடலைச் சுற்றியது!
பெய்மழைபோல் கண்களிலே
    நீரும் பெருகிற்று!

காளை மனந்தேறிக்
    காற்றாய்ப் பறந்தோடி,
மீளவந்து வாய்நீரைப்
    பெண்கழுதை தன்முகத்தின் 295
மேல்ஒழுக விட்டுவிட்டு,
    மேனி விசித்தழுத
பால்முகத்துக் குட்டியினை
    மெத்தப் பரிவாக,

"ஒன்றுமில்லை பெண்ணே, உன்
  அம்மா உடனெழுவாள்;
என்றும் இதுபோல
  நான்கண்ட தில்லை;"—என்று
தேற்றியது; 300

அக்கால்
  கழுதை விழிதிறந்தே—
ஆற்றாமை யோடே
  அழுது புலம்பிற்று!



# இயல் : 4

நாயகனும் இல்லாத
வாழ்வுமொரு வாழ்வாமோ?

காளை மனங்கசிந்து
கண்கள் நனைந்திடவே
தோளை மிகத்தாழ்த்தி,
"துன்பந்தான் என்ன?"—எனக்
கேட்டவுடன் பெண்கழுதை
உள்ளம் கிளர்வுறவே,

வாட்டத்தை எல்லாம்
வடித்தெடுத்துக் கூறிடுமே: 305

"ஐயோ, நான் ஏதுரைப்பேன்?
அத்துயரை என்னென்பேன்?
பொய்யாய் வெறும்பொக்காய்ப்
போனதுவே என்வாழ்க்கை!
என்னருமை நாயகரைப்
பார்த்திருக்க மாட்டீர்கள்!
பொன்னால் வடித்தவுடல்!
பூப்போல் படிந்தமயிர்!

வெள்ளை வெளேரென்னும்
மூக்கோ மிகஅழகு!— 310
உள்ளம் அதனைவிட
வெள்ளை! மிகவெள்ளை!
கள்ளமிலா ஐயனையா,
என்கணவர்! அன்னவரின்
கொள்ளை அழகில்
குழைந்துபோய் நின்றவள்நான்!

ஓடாய் உழைத்திட்டார்;
ஒன்றன்று; மூன்றுபொதி
ஆடா தசையாமல்
ஆற்றுக்கும் வீட்டிற்கும்— 315
நாளும் சுமப்பார்;
நடைக்கு மனஞ்சலியார்!

நாளும் பணிமுடிந்தால்
    நாட்டாண்மைக் காரரோ
எங்கள் இருவரையும்
    ஒன்றாய்ப் பிணித்திடுவார்!
பொங்குமய்யா என்னுள்ளம்!
    பூரித்துப் போவேன்நான்!

ஒத்தநடை போட்டபடி
    ஊரெல்லாம் காடெல்லாம்— 320
புத்துணர்வு கூட்டுகின்ற
    புல்லடர்ந்த பக்கமெல்லாம்
மேய்ந்திருப்போம்! அக்கால்
    மனத்தால் இணைந்துவிட்டோம்!
வாய்ந்ததொரு நாள்முதலா
    வாழ்க்கை தொடங்கிவிட்டோம்!

ஓராண்டு செல்ல,
    ஒருநாள் நலிவுகொண்டார்!
நாராய் மிகமெலிந்தார்;
    நானோ நிறைசூலி! 325
மூன்றுபொதி தூக்குகின்ற
    வன்முதுகு கூன்விழவே—
ஊன்றுகால் போட்டே
    உடல்தளர்ந்து சோர்ந்துவிட்டார்!

மேனி தளர்ந்ததனால்
    மேய்ச்சலுக்குச் செல்வதில்லை;

தீனிக்குக் கேடெனவே
    ஆண்டை விரட்டிவிட்டார்!

நொண்டிநொண்டிச் செல்வார்;
    நொடிதங்கிப் பின்நடப்பார்.— 330
கண்டுகண்டு நொந்தேன்!
    கடினமனக் காரிநான்!
இல்லையென்றால் என்றோ
    இறந்திருக்க மாட்டேனா?
புல்லையா தின்றேன்!
    புழுதியன்றோ தின்றதுநான்!
இப்படியே கண்முன்
    இருந்த அவரொருநாள்
எப்படியோ எங்கேயோ
    என்னைவிட்டுப் போய்விட்டார்! 335
காணாமற் சென்ற
    கணவன் தனைநினைந்தே
ஊணுண்ண மாட்டேன்;
    உறக்கம் கொளமாட்டேன்;
நீரருந்த மாட்டேன்;
    நிழலில் படுத்திருக்கேன்
ஈருயிர்க் காரிநான்
    இங்ஙன் இருந்ததனால்,
கால்கள் சவசவக்கும்;
    கண்கள் மிகவிருளும்! 340
வால்வீசக் கூடவுடல்
    தெம்பின்றி வாடிவிட்டேன்!

முட்டையினை வைத்தால்
முதுகெலும்பு 'விண்'ணென்னும்!
ஆட்டி அசைந்தசைந்தே
ஆற்றுக்குப் போய்ச்சேர்ப்பேன்!
வாழாமல் வாழ்ந்துவந்தேன்;
வந்து, அவரும் சேரவில்லை!
பாழடைந்த போக்கில்நான்
எத்தனைநாள் பார்த்திருப்பேன்? 345

நாயகனும் இல்லாத
வாழ்வுமொரு வாழ்வாமோ?
மாய்ந்திடுமுன் நான்காண
எண்ணி மனந்துணிந்தேன்.

ஓர்நாள் இரவில்
உறக்கமின்றி நானெழுந்தே
ஊர்முழுதும் தேடி
ஒருபயனும் இல்லாமல்,
அண்டையுள்ள ஊர்சென்றே
ஆறுவயல் ஏரியெல்லாம் 350
குன்றெல்லாம் குட்டை
குளமெல்லாம் தேடிவிட்டு, ஓர்
ஒற்றையடிப் பாதைவழி
ஒய்ந்து நடந்துவந்தேன்.
மற்றையதை என்சொல்வேன்?
எங்ஙன் மனம்பொறுப்பேன்?

காளையரே! நானோர்
கழுதைப் பிறவியிலும்
பாழான பெண்பிறவி
அன்றோ? பதறிவிட்டேன்! 355
குக்கிக் குமைந்தேன்!
குலைநடுங்கிச் செத்துவிட்டேன்!

முக்கல் முனகலொடும்,
மூடுகின்ற கண்களொடும்
வாய்கோணி, நீர்வழிய
வாய்க்கால் புறத்தே, என்
நாயகனைக் கண்டேன்
நாடி தளர்ந்துவிட்டேன்!

'அய்யோ'வென் றோர்டி
அவர்மேல் விழுந்தழுதேன்! 360
மெய்யாகக் கண்திறந்தார்!
மீண்டுமவர் பேசவில்லை.

தோலாய் அவர்கிடந்தார்;
தூங்குவது போல்கிடந்தார்.
ஏலாமல் நின்றிருந்தேன்;
என்செய்வேன் பேதைநான்!
தன்னந் தனியாக
நோயாய்க் கிடந்திருந்து
தன்னந் தனியாகப்
போய்ச்சேர்ந்தார்! தாயானேன்! 365

சங்காக ஆர்க்கின்ற
என்னரசன் வல்குரலை
எங்கினிநான் கேட்பேன்?
இவள்பொருட்டே வாழ்கின்றேன்!"
—என்று கழுதை
இருவிழியும் நீர்வடிய
நின்றபடி தன்துயரை
நீள உரைத்ததுவே!

இத்துயரைக் கேட்ட
இளங்கழுதை தாயினிடம்
"செத்துவிட்ட தந்தை
சிவப்போ கறுப்போ"வென்(று)
ஏழைக் குரலிலே
கேட்டிடவும், "என்போல்தான் 370
வாழைச் சருகு நிறம்!
வாடாத மேனி"—என்றே
அன்னைக் கழுதை
அதனிடத்துக் கூறியது.



# இயல் : 5

மாந்தர்இனப் பெண்களைப்போல்
எண்ணி மதித்தீரோ?

முன்னால் இருந்தழுத
காளை முகந்தூக்கி

"என்னருமைத் தோழியே
ஏக்கத்தை விட்டுவிடு!

உன்னருமைக் காதலனை
எண்ணி உருகாதே! 375
என்னருமைத் தோழன்
ஒருவன் இருக்கின்றான்;

அன்னவன்பால் உன்னை
அறிமுகம்நான் செய்கின்றேன்;
உன்னை மணஞ்செய்ய
உள்ளம் இசைந்திடுவான்;
பொன்னைப்போல் வைத்திருப்பான்!
பூதம்போல் காத்திடுவான்!
தானுண்ண மாட்டான்;தன்
பங்கை உனக்களிப்பான்! 380
ஊனுயிரை வாழ்வை
உனக்கே உவந்தளிப்பான்
நல்ல மனமுடையான்;
நன்றாகப் பாடிடுவான்!
முல்லை நிறமூக்கு!
முட்டியிடாப் பின்கால்கள்!
மாரியம்மன் கோயிலிலே
நின்றிருக்கும் மண்குதிரை
நேரிலே வந்ததுபோல்
நிற்குமவன் நீண்டவுடல்! 385

மூட்டைக்குக் கூனா
முதுகவனின் வல்முதுகு!
பேட்டைக்கும் ஆற்றுக்கும்
பத்துமுறை போய்வருவான்!

கோட்டைக் கழுதைகளை
எல்லாம் ஒருங்கிணைத்துக்
கூட்டமொன்று போட்டுக்
"கழுதைக் கழகமொன்றைத்
தோற்றுவித் துள்ளான் — என்
தோழனெனில் கண்டுகொள்ளேன்! 390

ஆற்றுப் படுகைக்
கருகிருக்குங் குப்பத்துச்
சின்னான் ஏ காலி
சிதம்பரம்போய் வாங்கிவந்த
'பொன்னான்' எனுங்கழுதை
'பூவாய்'க்குத் தந்தமகன்!

"பேர்கேட்டால் நீவியப்பாய்";
"வேங்கை" பெரும்பேர்தான்!
ஆர்ப்பாட்டப் பேர்வழிதான்!
ஆனாலும் கொள்ளைஅன்பு! 395

இன்றை வரைக்குமவன்
எக்கழுதைப் பெண்ணையும்
நின்றும் அரைக்கண்ணால்
நேர்க்குநேர் பார்த்ததில்லை!
ஒன்றுமட்டும் உண்மை;அவன்
உன்னை விரும்பிடுவான்!
இன்றுனக்கு நல்லநாள்!
என்பின்வா" — என்றதுவே!

காளை உரைத்தவுரை
    காதில் கடுநஞ்சாய்க் 400
கூளைக் கழுதைதன்
    கூர்ங்காதில் பட்டவுடன்
உள்ளம் நடுங்க
    உயிர்நடுங்கக் கண்ணீரின்
வெள்ளம் பெருக்கெடுக்க
    விம்மிவிம்மித் தானழுது,
காளையினை நோக்கிக்
    கடுங்குரலில்,

"அண்ணாவே!
பாளைச் சிறுமியவள்
    பால்முகத்தைப் பாருங்கள். 405
இச்சிறுமி மேல்உறுதி;
    என்கணவன் மேல்உறுதி;
அச்சில்லா தோடிடும்நம்
    அண்டத்தின் மேல்உறுதி;
என்கணவன் மாய்ந்தபின்னை
    இன்னொருவன் தன்முகத்தை
என்னிறுதி நாள்வரைக்கும்
    ஏறெடுத்து நான்பாரேன்.
என்னவென்று எண்ணிவிட்டீர்?
    ஏதவுரை கூறிவிட்டீர்? 410

தின்னுவது மண்ணா? என்
    தீய்ந்திருக்கும் உள்ளத்தில்

அம்பன்றோ பாய்ச்சிவிட்டீர்!
  அண்ணா பொறுக்கிலையே!
வெம்புகின்ற பெண்ணுயிரை
  வீணே துடிக்கவைத்தீர்!
மாந்தரினப் பெண்களைப்போல்
  என்னை மதித்தீரோ?

வேந்தனென்பார்; தெய்வமென்பார்;
  வேண்டித் தவமிருந்து 415
பெற்ற கணவனென்பார்:
  பேச்சுக்கு நூறுமுறை
வெற்றன்பால் 'அத்தான்அத்
  தான்'என்றே வீணுரைப்பார்!
தேன்போலும் சொல்அளப்பார்;
  திரிபில்லாத் தொண்டுசெய்வார்;
ஆனாலும் உள்ளம்
  அழுக்கேற வாழ்ந்திருப்பார்!

கொட்டு முழக்கெடுத்துக்
  குத்துவிளக் கேற்றிவைத்துக் 420
கட்டியபொன் தாலி
  கழுத்தில் புரள்கையிலும்
வேறோராள் தன்னை
  விரும்பி ஒழுங்கிழப்பார்.
கூறுதற்கே என்றன்நா
  கூசி நடுங்கிடுங்காண்!

பெண்டிர்தாம் இங்ஙன்,என்று
  பேசிவிடல் நன்றன்று;

மண்டுகின்ற ஆடவர்க்கும்
    மண்ணில் ஒழுக்கமில்லை! 425

ஏழையென்றும் செல்வரென்றும்
    இவ்வகையில் மாற்றமில்லை;
மோழைப் பகட்டுகளால்
    மூடி மறைத்தாலும்
பெண்பாலும் ஆண்பாலும்
    பேச்சு மிகுந்தாலும்
பண்பில்லா உள்ளத்தைப்
    பார்த்தால் விளங்காதோ?
அத்தகைய பெண்டிரைப்போல்
    அண்ணா எனைநினைந்தே 430
இத்தகைய பாழுரையை
    என்முன்னர் கூறிவிட்டீர்!

ஊரிழந்து பேரிழந்தே
    உண்ண உணவிழந்து
சீரழிந்து போனாலும்
    செத்துத் தொலைந்தாலும்,
கட்டழகில் காளை—
    கனைத்தால் பெருங்குதிரை—
பட்டாள வேந்தைப்
    பறிகொடுத்த பின்னேநான் 435
என்றும் தனித்தவள்தான்"
    என்றந்தத் தாய்க்கழுதை
முன்னின்ற காளை
    முகங்கவிழக் கூறியதே!

பெண்கழுதை இவ்வாறு
  பேசியதைக் கேட்டவுடன்,
கண்களிலே நீர்ததும்பக்
  காளை மிகவருந்தி,
"அம்மாவோ உன்தூய்மை
  அன்பை உணராமல் 440
சும்மாஓர் பேச்சுக்குச்
  சொல்லிவிட்டேன்; நீபொறுப்பாய்!

உன்றன் கணவன்மேல்
  உண்மையன்பு கொண்டதனால்
என்றன் கருத்துனக்கோ
  எட்டிக் கசப்பாகும்!
பெண்குலத்தில் உன்றன்
  பெருமை தனிப்பெருமை!
மண்ணுலகில் இன்றைக்கும்
  மாண்பு மடியவில்லை. 445
அப்பேச்சை விட்டுவிடு:
  ஆனாலும் ஒன்றுரைப்பேன்.
தப்போ? சரியோ?
  தவறிழைக்க நான்விரும்பேன்.



# இயல் : 6

மொத்தத்தில் மக்களெனும்
மூட இனத்தினுக்கு
மெத்தப் பெருமையில்லை!
மேற்பிறவி என்பதும் பொய்!

*"மாந்தரிடம் நாம்வாழ்ந்து*
*மாளாத் துயருற்றோம்!*
*சாந்துணையும் துன்பந்தான்.*
*சள்ளை ஒழியாது!*

மக்களென்பார் தங்களையே
    மாய்த்துவிடும் காலமிது! 450
ஒக்க அவரினத்துள்
    ஒற்றுமைக்கு வாய்ப்பில்லை.
கோடிக் குலம்பகுப்பார்;
    கோடி மதம்வகுப்பார்;

வாடி வருந்துவர்க்கோர்
    வாய்க்குணவு தாம்கொடுக்கார்.
ஏழையென்றும் செல்வரென்றும்
    ஏற்றத்தாழ் வுற்றிடுவார்;

வாழையடி வாழையென
    வாட்டமுறும் ஓர்கூட்டம்! 455
அக்கூட்டம் தன்னை
    அடிமைசெய்யும் ஓர்கூட்டம்!
மிக்க துயரிழைக்கும்!
    மீளத் தடைசெய்யும்!

ஓலைக் குடிசையிலே
    ஓர்கூட்டம் வாழ்ந்துவரும்!
மேலைக் குடியென்பார்
    மேல்மாடி வாழ்வுசெய்வார்.

உப்புக் கலைவார்
    ஒருவர்; பிறிதொருவர் 460
தொப்பை வருந்தத்
    துருப்பார் கனிவகைகள்!

கந்தை அணிவார்
ஒருவர் பிறிதொருவர்
செந்தாழம் பட்டைச்
சிறப்பில்லை என்றெறிவார்!

நோயால் வருந்தும்
ஒருகூட்டம்; வேறொன்றோ
ஓயாமல் உண்டு
செரிக்க மருந்துண்ணும்! 465

கொட்டுமழை வெய்யில்
குளிரில்வாழ் வார்ஒருவர்;
பட்டுத் தலையணையில்
பாதம்வைப் பார்ஒருவர்!

கோயிலென்றும் தெய்வமென்றும்
கோடிக் கதைபடிப்பார்;
வாயிலொன்றும் நெஞ்சிலொன்றும்
வாழ்க்கை நடத்திடுவார்!

'பார்ப்பார்'என் றோரினத்தைப்
பார்த்திருக்க மாட்டாய்நீ! 470
ஊர்ப்பால் வருந்துயரம்
எல்லாம் அவரால்தான்!

நெற்றி நிறையவெண்
நீறணிவார்; உச்சியிலே

கற்றைக் குடுமிமயிர்
காற்றில் சிலிர்சிலிர்க்கும்!

பூணூல் அணிவார்;
'புரோகிதங்கள்' செய்திடுவார்;
காணாக் கடவுளுக்கே
'காவலர்யாம்' என்றுரைப்பார்! 475

தெய்வப் பிறவியென்பார்;
தீண்டிவிட்டால் தீட்டென்பார்;
பொய்புளுகு மூட்டைப்
'புராணங்கள்' பாடிடுவார்.

'சாத்திரங்கள்' பேசிடுவார்;
'சாதி' குலம்வகுத்தார்;
நாத்திறத்தால் ஏய்ப்பார்;
நடிப்பால் பிழைத்திடுவார்!

அன்னவரின் பேச்சில்
அறவே மயங்கியவர் 480
மன்னவ ரானாலும்
மதியிழந்தே போவார்கள்.

மொத்தத்தில் மக்களெனும்
மூட இனத்தினுக்கு
மெத்தப் பெருமையில்லை!
மேற்பிறவி என்பதும்பொய்!

நற்கழுதை அம்மையே!
நானுரைப்ப தெல்லாமும்
கற்காலச் செய்தியில்லை;
கண்களினால் காண்பனவாம்! 485

இன்னுங்கேள்..." என்றுரைத்த
ஏற்றை இடைமறித்து,
"முன்னே ஒருகூட்டம்
ஏதோ முழங்குவதைப்
பாருங்கள்" என்று
கழுதை பதைபதைக்க,

"வாருங்கள் இப்பால்
ஒளிந்து, வருங்கூட்டம்
செய்வதென்ன என்றறிவோம்"
என்றே செழுங்காளை 490
மொய்ம்புதரைக் காட்டியது!
மூன்றும் முடங்கினவே!



# இயல் : 7

தற்பெருமை பொய்ப்புகழ்ச்சி
மாந்தர் தனியுடைமை!

வந்த பெருங்கூட்டம்
வாழ்த்தொலிகள் சேர்ந்தொலிக்க
அந்தப் புதைகாட்டை
அண்மி,அது கொண்டுவந்த
பாடை இறக்கிவைத்துப்
பட்டபிணம் தூக்கியொரு

மேடைவைத்து மாலைபல
    மேல்போர்த்திப் பின்வருமா(று) 495
ஓரிருவர் பேச
    உருக்கமொடு கேட்டனவே!

"சீர்மிகுந்த தோழரீர்!
    இன்று பலர்புகழும்
பேர்மிகுந்த நம்தலைவர்
    நம்மைப் பிரிந்துவிட்டார்;
ஊர்மிகுந்த துன்பநிலை
    உற்ற(து)இனி என்செய்வோம்?
இன்ன தலைவரைப்போல்
    எப்படிநாம் பெற்றிடுவோம்? 500
மன்னருக்குள் மன்னர்;
    மதிப்புயர்ந்த மாந்தரிவர்!

அன்ன தலைவர்
    அரும்பேர் விளங்கிடநாம்
பொன்னால் படிவமொன்று
    செய்தாலும் போதாதே!
ஆனாலும் வெண்கலத்தால்
    அன்னார் படிவமொன்று
மேனாள் அமைக்க
    மிகுபொருளைச் சேர்த்துள்ளோம்" 505
—என்றொருவர் பேச
    இருந்தவரும் நன்றென்றார

பின்புபலர் மாய்ந்த
    பெருந்தலைவர் மாண்புரைத்தார்.

அன்பர் இரங்கலுரை
  ஆற்றி முடிந்தவுடன்
இன்பத் தலைவருடல்
  எல்லாச் சிறப்புடனும்
நல்லடக்கம் செய்யப்
  படவும், நடந்தார்கள்! 510

புல்லடர்ந்த மொய்ம்புதர்க்குள்
  போயொளிந்த தாய்க்கழுதை
குட்டியொடும் காளையொடும்
  வந்து குறுகுறுப்பாய்
எட்டிநடை போட்டே
  இடுகாட்டைத் தாண்டியது!

தாண்டியதும் காளை
  தனைநோக்கி, "அண்ணாவே
மாண்ட தலைவர்தம்
  மாண்புகளைக் கேட்டீரோ? 515
மன்னருக்குள் மன்னராம்!
  மாண்புயர்ந்த மாந்தராம்!
என்னே! வெறும்புகழ்ச்சி!
  எத்தகைய பொய்யுரைகள்!

அன்னவரை நானறிவேன்;
  ஆரும் அறிவார்கள்.
சின்னவருள் சின்னவராம்!
  சீர்கெட்ட மாந்தரவர்!
நான்வாழும் வீட்டிற்கு
  நால்வீடு தள்ளினால் 520

தான்வாழும் வீடாம்!
    தரங்குறைந்த வாழ்க்கையது!

அன்னவரின் வீட்டில்
    அயல்நாட்டு நாயொன்று;
சின்ன உரு வென்றாலும்
    உள்ளம் சிறந்ததுவாம்!
என்றனக்கு நண்பன்;
    இவர்கதைகள் அத்தனையும்
ஒன்றுவிடா தென்பால்
    உரைத்துளதால் யானறிவேன்! 525
நாட்டில் உயர்ந்தவராய்
    நாலுபெயர் பேசுவதும்
பாட்டில் புகழ்வதுவும்,
    பட்டாடை போர்த்துவதும்,
கற்படிமம் நாட்டுவதும்
    காசுபணம் செய்வதுவாம்!

தற்பெருமை பொய்ப்புகழ்ச்சி
    மாந்தர் தனியுடைமை!
கான விலங்குகளும்
    வானப் பறவைகளும் 530
மானம் உடையனவால்,
    பொய்யை மதிப்பதில்லை!

இக்கால் ஒருவரையிங்கு
    ஏற்றமிகப் பேசினரே
அக்கதையைச் சொன்னால்
    அருவருப்பே மிஞ்சும்!

பெரியவராம்! மாண்புமிகப்
　　பெற்றவராம்! மக்கட்கு
உரிய தலைவராம்!
　　ஊர்வருந்தச் செத்தவராம்! 535

அத்தனையும் பொய்யே!
　　அவர்கீழ்மை என்னென்பேன்!
பித்தர் பெருங்குடியர்!
　　பெண்வெறியர்! பொன்குறியர்!
ஊரவரை ஏமாற்றி
　　உண்டு கொழுத்தவர்காண்!
பேரை விளம்பரத்தால்
　　பேச்சால் வளர்த்தவர்காண்!

எத்தித் திருடிபல
　　ஏழையர்பால் வட்டிபெற்றுச் 540
சொத்துமேற் சொத்தும்
　　சுளையாய்ப் பெருந்தொகையும்
வைத்துவிட்டுப் போனவர்தாம்!
　　வாயடியர்; கையடியர்;
பைத்து வரவுப்
　　பதுக்கலிலே கைகாரர்!

ஈட்டுக்குப் பெற்றபொருள்
　　என்றும் திரும்பாது!
பூட்டுக்குப் பொன்திறவு
　　போட்டுத் திறப்பதனால் 545
கொள்ளைஎன் றாகாதோ?
　　மக்களென்றும் நொள்ளையரே!

வெள்ளையெல்லாம் பாலென்பார்!
    வேட்டியெல்லாம் நூலென்பார்!
இத்தகைய மக்கள்தாம் —
    ஏமாற்றி வாழ்பவர்தாம்,
மெத்தப் பெருமைகளை
    மேன்மேல் பெறுகின்றார்!

விண்ணிலுள்ள மீன்களையும்
    விரல் விட்டே எண்ணிடலாம்!
மண்ணில் பணஞ்செய்யும்
    மாற்றத்தை எண்ணுவதார்? 550
அப்பணத்தின் ஆட்சிக்(கு)
    அரசரிவர் என்சொல்வேன்"

— இப்படிச் சொல்லி,
    கழுதை எதிரிலுள்ள
காளையினை நோக்கிக்
    "கருத்தென்ன?" என்றிடவும்,
"பாளை பிளந்ததுபோல்
    உண்மை பகர்ந்துவிட்டாய்!" 555
மாலை நெருங்கிற்று;
    மற்றுமுங்கள் ஏகாலி
வேலை முடித்திருப்பான்!
    வீடுசெல்லல் வேண்டுமன்றோ?"
என்றதனைக் கேட்க,
    இரண்டு கழுதைகளும்
ஒன்றறன் முகத்தினை மற்
    றொன்றுபார்த் தேங்கினவே!



# இயல் : 8

வீடு திரும்புதற்கு
நாங்கள் விரும்பவில்லை!

காளையதைக் கண்டவுடன்
"என்ன கழுதையம்மை 560
'நாளை யெண்ணி வாழ்கின்றேன்'
என்றே நவின்றாய் நீ!
ஏனிந்தத் தொல்லையெல்லாம்?
எங்கேனும் ஓடிவிட்டால்

ஊனிழந்தா — போய்விடுவோம்?
 ஒண்டநிழல் காணோமா?

என்னவிடை சொல்கின்றாய்?
 ஏற்கனவே எண்ணிவிட்டேன்.
என்னதுயர் பட்டாலும்
 நானினிமேல் வீடுபுகேன்! 565
நீயென்ன கூறுகின்றாய்?
 நேற்றுவரை என்வாழ்க்கை
காயிற் புளியங்காய்!
 காட்சியிலே எட்டிக்காய்!"

என்று மிகச்சலித்தே
 ஏக்கப் பெருமூச்சும்
ஒன்று விட்டு நின்றதுகாண்!

 உள்ளம் இடிந்துநின்ற
தாய்க்கழுதைக் கிந்தவுரை
 தாளம்போல் ஆயிற்று 570
வாய்க்கவொண்ணாப் பேறுவந்து
 வாய்த்ததென எண்ணிற்றே!

ஆகவே காளையிடம்
 "அண்ணாவே எங்களுக்கும்
சாகவழி காட்டிடினும்
 சாகத் துணிகின்றோம்!

வீடு திரும்புதற்கு
நாங்கள் விரும்பவில்லை!
காடெனினும் உங்களுடன்
கால்கடுக்க வந்திடுவோம்! 575

இன்னுமிங்கு நின்றிருந்தால்
ஏகாலி வந்திடுவான்!
என்னயினிச் செய்வதென
எங்கட் குரையுங்கள்"

என்றே உரைத்ததது!
இவ்வுரையைக் கேட்டவுடன்,
"நன்றினிமேல் என்பின்
நடவுங்கள்; காட்டிற்கே
சென்று நம் நல்லினத்தோ
டோரினமாய்ச் சேர்ந்திடுவோம்" 580

என்றபடி காளை
எதிரிலுள்ள பாதையிலே
வெற்றிகொண்ட பேரரசன்
வீறுநடை போட்டதுபோல்
நெற்றி உயர்த்தி
நடந்த(து); அவை பின் நடந்த!



# இயல் : 9

பாரிலுள்ள மாந்தர்இங்குப்
பண்ணும் பிழைகளுக்கே
ஊரென்ன செய்யும்?
உலகந்தான் என்செய்யும்?

காளையண்ணன் முன்னும்
கழுதையம்மை பின்னுமாய்த்
தோளுயர்த்திப் போகவே
குட்டி தொடர்ந்தோடும்! 585

மக்கள் புதைகாட்டில்
　　மண்ணிட்ட மேடுகளும்
மிக்குயர்ந்து நின்ற
　　நெடுமரங்க ளும்கடந்தே,

ஆற்றோரம் தாண்டி,
　　அழகாய்ச் சிலிர்த்தோடும்
ஊற்றோரம் வந்துநின்றே
　　ஊரை இறுதிமுறை

பின்திரும்பிப் பார்த்துக்
　　கழுதையம்மை பேசிற்றே!— 590

"என்பிறந்த ஊரிதனை
　　இன்னும் சிறுபொழுது
கண்ணாரப் பார்க்கின்றேன்;
　　காத்திருங்கள் அண்ணாவே!
எண்ணாத எண்ணமெல்லாம்
　　நெஞ்சில் எழுகுதையே!
பாரிலுள்ள மாந்தரிங்குப்
　　பண்ணும் பிழைகளுக்கே
ஊரென்ன செய்யும்?
　　உலகந்தான் என்செய்யும்?" 595

"இவ்வூரில் தான்பிறந்தேன்!
　　இவ்வூரில் தான்வளர்ந்தேன்!
இவ்வூரில் தான்என்றன்
　　இன்கணவர் கைப்பிடித்தேன்!

கைப்பிடித்த நாள்முதலாக்
காட்சியென்ன! மாட்சியென்ன?
மெய்ப்புகழ்ச்சி! மெய்க்களிப்பு!
மீளாத இன்கனவு!

என்கணவர் வேந்தன்!
எழிலரசி நானவர்க்கு! 600

பொன்னான வாழ்க்கை!
புதிதுபுதி தாய்இன்பம்!"

"பாட்டென்ன! ஓட்டமென்ன!
பச்சைப் பசும்புல்மேல்
ஆட்டமென்ன! கூத்தென்ன!
ஆன்ற பெருமையென்ன!

அச்சச்சோ! அவ்வாழ்க்கை
ஆடி அடங்கிற்றே!
மிச்சமிந்தப் பிள்ளைதான்!
மேலுமென்ன வாழ்வெனக்கே?" 605

"இங்கிருந்த ஆறும்
இடுகாடும் என்மனத்தில்
மங்காத காட்சிகளாய்
மறவா நினைவுகளாய்த்

தங்கிவரும்; ஆங்கவற்றால்
தாழ்ச்சியெலாம் வீழ்ச்சியுறும்!

எங்கிருந்த போதிலும்நான்
 எண்ணத்தால் வாழ்ந்திருப்பேன்!"

"ஆனாலும் மக்களென்பார்
 ஆட்சிச் செருக்காலே 610
வீணான நம்வாழ்வை
 வெற்றி பெறச்செய்வோம்!

நாட்டிலுள்ள மாந்தரிடை
 நாம்கண்ட கீழ்மைகளைக்
காட்டு விலங்குகள்முன்
 கட்டவிழ்த்துக் கூறிடுவோம்!"

—என்றுரைத்த வாறாய்
 இருகண்ணில் நீர்சொரிய
நின்றிருந்த பெண்கழுதை
 நீண்டதொரு துன்பப்பண் 615
பாடுவது போலப்
 பரிய குரலெடுத்துக்
காடு கிடுகிடுக்கக்
 கத்தி அடங்கிற்று!

காம்போதிப் பண்ணின்
 கருத்துக் கிசைவதுபோல்
ஆமாமா வென்றே
 அடிக்குரலில் காளையண்ணன்
ஒத்திசைத்துப் பாடியதே!
 ஓங்கும் குரலிசைபோய் 620

எத்திசையும் பாய
    இருளுலகம் அஞ்சிற்றே!

காளைக் குரலும்
    கழுதைகளின் வன்குரலின்
ஊளை இழுப்பும்
    ஒடுங்கியதும் மூன்றுமாய்
ஊர்தாண்டி மேற்கே
    ஒருகல் தொலைவுபோய்
நீர்நிரம்பி நின்றிருக்கும்
    நீண்டதோர் ஏரியின் 625
பக்கத் திருக்குமொரு
    பாழ்க்குடிலை வந்தடைந்த!

மிக்க இருள்போர்த்
    திருந்ததனால் மேன்மேலும்
செல்ல விரும்பாமல்
    சேர்ந்தொருங்கே ஓய்ந்திருந்த!
நல்ல பசிமிகுந்து
    நாவறட்சி கொண்டதனால்,
காளையசை போட்டபடி
    கண்ணயர்ந்து தூங்கியது! 630

கூளைக் கழுதையம்மை
    குட்டிமுகத் தோடுமுகம்
சேர்த்தணைத்த வாறாய்ச்
    சிறுதூக்கம் போட்டபடி
ஆர்த்தெழுந்த தீப்பசியால்
    உள்ளம் அழுன்றதுவே!

நள்ளிரவு! மூன்றுயிர்கள்!
நாடும் விடுதலைக்கே
துள்ளும் உளத்துடிப்பால்
துன்புற்று வாடினவே! 635

நம்பும் விடுதலைக்கே
நாட்டமுறும் வல்லுயிரை
வெம்பசிதான் என்செய்யும்?
வெந்துயர்தான் என்செய்யும்?

வல்லடிமை போக்கிவிட்டு
வாழவொரு திட்டமிட்டுச்
செல்லும் மறவோர்க்குச்
செருக்களமும் புல்தரையே!

ஆண்டாண்டுக் காலம்
அடிமைத் துயராலே 640
மாண்டொழியும் நல்லுயிர்க்கு
நல்லதிறம் வாய்த்துவிட்டால்,
துன்பவிருள் என்செய்யும்?
தொல்லைமழை என்செய்யும்?
வன்பு மடவோர்தம்
வல்வினைதான் என்செய்யும்?

வாடை துளைத்தெடுக்கும்!
வண்டினங்கள் மெய்குடையும்!
மூடி யிருந்த
முழுவிருளில் மூன்றுயிர்கள் 645

கொல்பசியால் வல்லுறக்கம்
　　கொண்டிருக்கும் வேளையிலே
தொல்குடிலின் வாயிலிலே
　　தோன்றியதோர் வன்கூட்டம்!



# இயல் : 10

நம்போல் விலங்கிடை, இக்
காட்டுமனம் சூழ்வதில்லை;
கள்ளமிட்டும் வாழ்வதில்லை!

வந்திருந்த கூட்டத்தார்
வைத்திருந்த மூட்டைகளும்
பந்த விளக்குகளும்
பார்க்கப் பளபளக்கும்
கத்திகளும், கன்னமிடு
கோலும், கயிறுகளும் 650

பாழ்குடிலின் உள்ளே
  பதுக்கிவைக்கப் பட்டனவே!

ஆழ்துயிலிற் பட்டிருந்த
  அவ்வுயிர்கள் மூன்றுமே
ஆளரவம் கேட்டவுடன்
  அஞ்சி விழித்தனவே!
காளையோ மூச்சொன்றும்
  காட்டாமல் அங்கிருந்த
தாய்க்கழுதை யின்பால்
  தலையாட்டிக் கண்காட்டி, 655

வாய்திறவா தாங்கிருக்க
  வாகாய் உணர்த்தியது!

குட்டி குலைநடுங்கிக்
  கொண்டதனின் தாய்வயிற்றோ(டு)
ஒட்டி ஒடுங்கியது!
  ஓர்நாழி சென்றிருக்கும்!

வந்த திருடர்
  வழிபறித்த செல்வமெல்லாம்
தந்தமக்குள் பங்கிட்டுத்
  தாங்கொண்டு வந்திருந்த 660

உண்டிப் பொருளையெல்லாம்
  உண்டு, பழங்கள்ளை

மண்டியபின் ஓடி
　　மலைமேல் மறைந்தனரே!

எல்லாருஞ் சென்றபின்பு
　　காளை எழுந்துசென்று
"எல்லாரும் வாருங்கள்"
　　என்று குரல்கொடுக்கத்
தாய்க்கழுதை குட்டியொடு
　　தாவியங்குச் சென்றதுவாம்! 665

"வாய்ப்பை உணர்ந்தாயா?
　　வாருங்கள் உண்போம்நாம்"—

என்றே மகிழ்வாக
　　ஏறு உரைத்ததுவே!
முன்றிலிலே மீந்தபொருள்
　　மூவருக்கும் போதியதாம்!
காந்தப் பசியாலே
　　கண்ணயர்ந்த மூவுயிரும்
மீந்த பொருளை
　　மிகவிரும்பி உண்ணுகையில் 670

காளையிடம் சின்ன
　　கழுதைமகள், "ஐயா, இவ்
வேளையிலே வந்தவரார்
　　கொஞ்சம் விளக்கிடுங்கள்"
—என்று வினாவிடவும்,
　　ஏறு விளக்கியதாம்!

"நன்று வினவினை, நீ!
நள்ளிரவில் கள்ளரல்லால்
நட்ட நடுக்காட்டில்
நல்லோர் வருவாரோ? 675
திட்டமுடன் கேள்நீ!
திருடரென அன்னவரை
நாட்டோர் உரைப்பார்கள்!
நம்போல் விலங்கிடை, இக்
காட்டுமனம் சூழ்வதில்லை.
கள்ளமிட்டும் வாழ்வதில்லை.

மக்களிடை இன்றிருக்கும்
மாண்பில்லாக் கீழ்மைகளுள்
ஒக்கவிது வொன்றாகும்!
உண்மைநிலை இன்னுங்கேள்: 680

உண்ணும் உணவை
உழுது விளைவிப்பார்
உண்ணா துயிர்வருந்தும்
ஒட்டை உலகமிது!

கட்டும் உடைநெய்யக்
காலமெல்லாம் தேய்ந்திடுவார்
கட்டத் துணிக்கலையும்
கல்மனத்து மாந்தரிவர்!

மக்கள் குடியிருக்க
மண்ணாலும் கல்லாலும் 685

தக்கபடி வீடுகளும்
தாழா வளமனையும்
கட்டிக் கொடுத்திடுவோர்
காலமெல்லாம் வாழ்வதுவோ
ஒட்டுக் குடிசை!
ஒழுகுகின்ற மேற்கூரை!

கோட்டைபோல் கொத்தளம்போல்
குன்றைப்போல் வானுயர
வீட்டை அமைத்து,
விளக்குகளும் தாம்பொருத்தி, 690
முக்காலும் பூட்டிவைத்து
முன்னுள்ள கால்பகுதிக்
கெக்காலும் காவல்
இருப்பதுபோல் ஓரிருவர்
வாழ்ந்துவரும் காட்சியினை
வாயால் உரைப்பதுவோ?
சூழ்ந்துவரும் ஏய்ப்புகளும்
சொல்லால் புரிவதுவோ?

தோல்தொழில்கள் செய்வார்;ஊர்
துப்புரவு செய்திடுவார்: 695
கால்செருப்புத் தைப்பார்;
கழிசெருப்பும் தாமணியார்!

கள்ளப் பணங்கள்;
களவுமிகு வாணிகங்கள்!
எள்ளி நகையாடற்
கேய்ந்த இழிசெயல்கள்!

ஈங்கிவற்றின் சூழ்வில்
　இருளில் புதையுண்டு
தாங்கவொண்ணா வெம்பசியைத்
　தாங்கிவரும் ஓர்கூட்டம் 700
என்னதான் செய்யுமிங்கே?
　எப்படித்தான் வாழ்ந்துவரும்?
தின்னத் திருடுமன்றோ?
　தீங்குசெய்ய முந்துமன்றோ?

எல்லார்க்கும் எல்லா
　நலமும் இயைவதென்றால்,
இல்லார்க்கும் கேடில்லை;
　ஏய்ப்பார்க்கும் வாய்ப்பில்லை!
அந்நாள் வரையிலும்
　ஆக்கம்போல் வீழ்விருக்கும்! 705
அந்நாள் வரத்தான்
　அறிஞர் முயல்கின்றார்

மக்கள் உலகின்
　மனம்வெதும்பும் செய்திகளை
ஒக்க உரைப்பதெனில்
　உள்ளம் கொதிப்பேறும்!

ஊரென்றும் நாகரிகம்
　ஓங்கும் நகரென்றும்
பேர்கொண்ட தல்லால்
　பெருமை துளியுமில்லை! 710

அந்த இழிவெல்லாம்
　　ஆறாத் துயரெல்லாம்
நந்தம் இனத்தோரை
　　நாம்போகும் காட்டிடையில்
கண்டுரைப்போம்” என்றுரைத்துக்
　　கள்ளர்க்கு மீந்தவுணா
உண்டுறக்கம் கொள்ளுதற்குக்
　　காளை உரைத்திடவும்,

மூன்றும் உணவருந்தி
　　முன்னிருந்த ஆலமரத் 　　　　715
தூன்றும் விழுதிடையில்
　　ஒன்றாய் அருகருகாய்
வீழ்ந்துறக்கம் கொண்டனவாம்!



# இயல் : 11

கேளாதிப் பாழ்நெஞ்சம்
கேட்கின்ற வேண்டுதலை
மெய்யாய் நிறைவேற்றி
நற்பேறு மேவிடுங்கள்!

காலை விடிந்தவுடன்,
ஆழ்ந்துறங்கும் பெண்கழுதை
அண்டைப் படுத்திருந்த
குட்டியினைக் காணாமல்
காளை குலைநடுங்கித்

தட்டி யெழுப்பிடவும்
 தாய்க்கழுதை மெய்பதறி, 720
துண்ணென் றெழுந்தோடி
 வீட்டினுள்ளும் தோப்பினுள்ளும்
"கண்ணே! மணியே!
 கழுதைகுலப் பேரணங்கே!
முத்தே! பவழமே!
 முன்பிறந்த வார்ப்படமே!
தத்துநடை மானே!
 தளதளக்கும் பொன்னுடலே!
எங்கேடீ போய்விட்டாய்?
 என்ன துயரமடி? 725
'இங்கே இவளென்னை
 எப்படித்தான் காத்திடுவாள்?'
என்று கருதி
 எனைவிட்டுப் போனாயோ?"

— என்று கதறி
 இருகண்ணில் நீர்வார,
நொச்சிமரக் கூட்டத்துள்,
 ஓங்கும் நுணாக்கடியில்,
பச்சைப் புதர்க்கிடையில்
 பாழ்ங்கிணற் றுக்குள், 730
சலசலத்து ஓடுகின்ற
 ஓடையெல்லாம், பார்த்து,
வெலவெலக்கக் கால்கள்,
 உடலம் வெயர்த்தொழுகத்
தேடிக் களைத்ததுவாம்!
 காளையண்ணன் தேற்றலுக்கும்

நாடி அடங்காமல்
உள்ளம் நடுங்கிற்றாம்!

"காளையண்ணே! வந்த
கடுந்துயரைப் பார்த்தீரா? 735
நாளை—இன்று என்றபடி
நான்பொழுதைத் தள்ளுகையில்
என்றன் பிடரியின்மேல்
ஏறி யழுத்துமொரு
குன்றுபோல் துன்பம்
குவிந்ததனைக் கண்டீரோ?

கண்ணுக்குக் கண்ணான
காதலனை அன்றிழந்தேன்!
மண்ணான வாழ்க்கைக்கென்
மன்னவன்தான் தந்துசென்ற 740
பெண்ணரசை இன்றிழந்தேன்!
பின்னும் பிழைப்பென்ன?

உண்ணுமொரு வாய்ச்சோறும்
சாணி உருண்டையன்றோ?
என்னைத் தடுக்காதீர்;
ஈதோ, இவ் வோடையிலே
என்னுயிரைக் கொன்றுகொள்ள
யான்துணிந்தேன்" என்றுரைத்தே,

எம்பிக் குதித்தோட,
காளை எதிர்ந்தோடி, 745

"நம்பியெனைக் கூட்டிவந்து
நட்ட நடுக்காட்டில்
விட்டுவிட்டு நீமட்டும்
வீழ்ந்திறத்தல் நல்லறமோ?
விட்டுவிடு நின்கருத்தை!
வீணாய் இறவாதே"

— என்றுபல கூறிடவும்
ஏலாத தாய்க்கழுதை
"குன்றுபோல் என்றன்
கொழுநற் பறிகொடுத்தேன். 750
அன்றே இறந்திருக்க
வேண்டும்நான்; ஆனாலும்
என்றன் மகளெண்ணி
வாழ்ந்திருந்தேன்; இப்பொழுதோ
அச்சிறுக்கி என்னை
அழவிட்டுப் போய்விட்டாள்.

எச்சம் இனியென்ன?
ஏதுக்கு வாழ்ந்திடுவேன்?
என்மேலே உங்களன்பு
இம்மியள வுண்மையென்றால் 755
என்னைத் தடுக்காதீர்;
இறந்துவிட எண்ணிவிட்டேன்"

— என்றுரைத்துத் தாவி
எதிராய் விடுவிடென்று

சென்ற கழுதையம்மை
சற்றே இடைநின்று,
பின்னோக்கிக் "காளையண்ணே,
பேச்சுத் திறம்பிவிட்டேன்;
என்னைப் பொறுத்திடுங்கள்
ஏழைநான் என்செய்வேன்!" 760

என்றுரக்கச் சொல்லிவிட்டு
மீண்டும் இரண்டடிகள்
சென்று, திரும்பிநின்றே,
"அண்ணே! சிறியவள்நான்;
வேண்டிக்கொள் கின்றேன்;
விருப்பம் மறவாதீர்;
மாண்டபின் என்றன்
மகளைக்காண் பீரென்னில்,
"அம்மா, மகளே!உன்
அப்பனிடம் போனாள்,உன் 765
அம்மா" —வென் றேவுரைப்பீர்!
அன்புள்ளங் கொண்டு,அவளை
ஆளாக்கித் தான்விரும்பும்
ஆளனிடம் ஒப்படைப்பீர்!

கேளாதிப் பாழ்நெஞ்சம்
கேட்கின்ற வேண்டுதலை
மெய்யாய் நிறைவேற்றி
நற்பேறு மேவிடுங்கள்!
வெய்யஎன் "ஆவி
விரும்பும் விருப்பமி(து)" என்(று) 770

உள்ள முருக
உயிரும் கரைந்துருக
வெள்ளம்போல் கண்ணீர்
விழிபெருகக் கூறிற்றே!

ஆங்குநின்ற காளையண்ணன்
அக்கூற்றைக் கேட்டபடி
ஓங்கிநின்ற கொம்பசைத்தே,
ஒப்புதலைக் காட்டிற்றே!
அக்குறிப்பால் தாய்க்கழுதை
ஆவி மகிழ்ச்சியுற 775
மிக்குணர்வால் ஓடைக்குள்
மின்னலெனப் பாய்ந்ததுவே!



## இயல் : 12

மீண்டும்போய்
வீணுக்கு மாந்தரிடை
வீழ்வதுவோ? சீ! சீ! சீ!

தாய்க்கழுதை இவ்வாறு
தன்னைத் தனிவிட்டுப்
போய்க்குதித்துத் தன்னுயிரைப்
போக்கியஅக் காட்சியினைக்
கண்டிருந்த காளையண்ணன்
கல்லாய்ச் சமைந்தபடி,

பண்டிருந்த தன்நிலையும்,
பாழுமொரு மாந்தனிடை 780
வந்தபின்னைத் தான்பட்ட
வல்லடிமை வாழ்வினையும்,

நொந்து மனம்வெறுத்து
நொய்ந்த துயர்நிலையில்
தன்போலும் துன்புற்ற
தாய்க்கழுதை கண்டதையும்,
முன்பதுதான் பட்ட
முழுத்துயரைச் சொன்னதையும்,

கற்ற கதையளந்து
காட்டுக்குக் கூட்டிவந்து 785
உற்ற துணையாய்
உவந்துநிற்கும் வேளையிலே
நம்பிவந்த தன்னை
நடுக்காட்டில் விட்டுவிட்டே
அம்புபோல் நீரில்பாய்ந்(து)
ஆவி துறந்ததையும்,

ஒன்றொன்றாய் எண்ணி,
ஒருசேர நீர்வடித்து,
நின்றிருந்த வாறே
நெடுநேரம் ஓட்டியதாம்! 790

கால்சோர, வாய்சோர,
காதோடும் கண்சோர,

வால்சோர, மெய்சோர
    வான்துயரங் கொண்டபடி,
காளை இனிவாழுங்
    காலத்தை எண்ணியதே!

"வேளை சரியில்லை;
    வீழ்ந்துயிரை மாய்த்திடலும்
ஆணுக் கழகில்லை!
    அப்படியே மீண்டும்போய் 795
வீணுக்கு மாந்தரிடை
    வீழ்வதுவோ? சீ! சீ! சீ!

"ஆனாலும் செய்வதென்ன?
    ஆடவரே என்றாலும்—
வானளவு பேராற்றல்
    வாய்த்தவரே என்றாலும்—
துன்னத் துரும்பும்
    துணையாகக் கொள்ளாரேல்
சின்ன வினையேனும்
    செய்தற் கியலாரே! 800

"அந்தோ! கழுதையம்மை
    ஆண்பிறவி இல்லெனினும்
சிந்தாத நல்லவுள்ளம்!
    சீர்குலையா நல்லொழுக்கம்!

"நல்லுளமும் நல்லொழுங்கும்
    நற்றுணையாய் வாய்த்துவிடின்

தொல்லுலகை வெல்வதற்கும்
  தோது பிறவாதோ?

ஆய்ந்தெடுத்த அத்துணைபோல்
  ஆரினிமேல் வாய்ந்திடுவார்? 805
ஏய்ந்த ஒருதுணையும்
  இன்றிழந்தோம்." என்றுபல
தோய்ந்த நினைவுகளால்
  துன்புற்ற காளையண்ணன்,
பாய்ந்த கழுதை
  பதைபதைத்துச் செத்ததனைப்
போய்ப்பார்க்கும் எண்ணத்தோ(டு)
  ஓடைப் புறத்தேபோய்
வாய்ப்பாகக் கீழ்க்குனிந்து
  வாய்பிளக்கப் பார்க்கையிலே, 810

முட்டி நனையா
  முழங்கால்நீர் ஓட்டத்தில்
பெட்டைக் கழுதை
  பிழைத்திருக்கக் கண்டதுவே!



# இயல் : 13

துன்பில் துவளாமல்
மேலுந் துணிந்திருந்தால்
இன்பம் எதிர்ந்துவரும்!

பெட்டைக் கழுதை
பிழைத்திருக்கக் கண்டவுடன்
நெட்டை நெடுங்காளை
நீண்டதொரு மூச்சுவிட்டுக்
கண்கள் மலர்த்தி, இரு
காதுகளை ஆட்டிவிட்டுப் 815

"பெண்களே இப்படித்தான்;
    பேதைத் தனமாக
நல்லுயிரைப் போக்குதற்கு
    நாக்கடிப்பாய்ப் பேசிடுவார்;

வெல்லம் உயிரன்றே;
    ஆனாலும் வீணாகத்
தன்னுயிரை மாய்த்துவிடல்
    தக்கதன்று; துன்பமென்ன
என்றும் இருப்பதுவா ?
    இன்றுவரும் நாளைசெலும்;    820
இன்பமும் அப்படித்தான் !
    எல்லார்க்கும் ஒன்றுதான் !

துன்பில் துவளாமல்
    மேலுந் துணிந்திருந்தால்
இன்பம் எதிர்ந்துவரும் !
    இஃதே உலகவியல் !
முன்புசெய்த தீச்செயலை
    முற்றும் மறந்துவிடு !

ஆர்செய்த நல்வினையோ
    அம்மா, பிழைத்துவிட்டாய் !    825
ஓடையிலே நீரில்லை;
    உன்னுயிரும் போகவில்லை;
ஏதோ ஒருசெயலுக்
    கின்னும் பிழைத்திருப்பாய் !

தீதோ இலை,நன்றோ!
　　தேற்றிக்கொள் உன்மனத்தை!
வீணாய் வருந்தாதே!
　　வீறுகொள் உள்ளத்தில்;
காணாமற் போனவுன்றன்
　　கண்மணியைத் தேடிடுவோம்! 830
மேலேவா" — என்றபடி,
　　அன்பு மிதந்துவரக்
காலால் தரையறைந்து,
　　கண்ணால் அழைத்ததுவாம்!

காளை யழைத்தவுரை
　　கழுதை மனங்கொண்டு,
தோளை மிகத்தாழ்த்தித்
　　தொங்கும் முகத்தோடு,
நாணம் உயிர்விழுங்க
　　மெல்ல நடந்துவந்து, 835
காணவும் வெட்கமுற்றுக்
　　கண்கள் கவிழ்ந்தபடி
"அண்ணா!இப் பேதையினை
　　அன்பால் பொறுத்திடுங்கள்!
பெண்ணாய்ப் பிறந்தால்
　　பெருந்துயரம் வந்தாலும்
தாங்கத்தான் வேண்டுமென்ற
　　தன்மை தெரியாமல்,
நீங்கிவிட — என்னுயிரை
　　நீக்கிவிட எண்ணிவிட்டேன்! 840

என்பிள்ளை எவ்விடத்தில்
எத்துயரம் கொண்டதுவோ?
என்பும் சதையும்
இருக்குமோ? இல்லையொரு
வல்விலங்கின் வாய்க்கே
வருவிருந்தாய்ப் போனாளோ?
பல்முளையாக் குட்டியவள்
பார்த்திடுவோம்; வாருங்கள்"

—என்றே அழைக்க
இரண்டும் இருங்காட்டுள் 845
ஒன்றன்பின் ஒன்றாக
ஓரிருகல் சென்றிருக்கும்.
நல்ல இருள்வந்து
நாற்றிசையும் சூழ்ந்ததுகாண்!

மெல்ல நடைதளர்ந்து,
மேலும் இயலாமல்
காளை, கழுதை
இரண்டும் களைப்பாறும்
வேளையிலே எங்கிருந்தோ
வேட்டு வெடித்தஒலி 850
காடே அதிர்வுறவும்,
காது செவிடுறவும்
ஊடாகப் பாய்ந்துவந்து
நெஞ்சை உலுக்கிற்று!

வேட்டொலியைக் கேட்டு
வெலவெலத்து நிற்கையிலே

கூட்டிலுள்ள ஆவி
    குடிபெயர்ந்து போவதுபோல்
ஏறிட்டு வானின்(று)
    இடியொன்று வீழ்ந்ததுபோல் **855**

வீறிட்டு அலறும்
    அரிமா முழக்கமொன்று
கேட்டிடவே, நெஞ்சம்
    கிடுகிடுக்க உள்நடுங்கி,
ஓட்டம் எடுத்தனவே
    காளை ஒருதிசையும்
பெண்கழுதை மற்றோர்
    திசையும் பிரிந்தனவாம்!

மண்மீதில் வாழ்ந்துவரல்
    மாந்தருக்கே துன்பமெனில், **860**
எண்ணரிய குற்றுயிர்கள்,
    ஏதுமற்ற சிற்றுயிர்கள்,
விண்பறவைக் கூட்டம்,
    விலங்கெல்லாம் என்செய்யும்?



# இயல் : 14

கல்லார் மனம்போல்
கருமையிருள்! அவ்விருளில்
பொல்லார் மனம்போல்
புதைகுழியும் முட்புதரும்!

*பெட்டைக் கழுதை*
*பெறற்கரிய பிள்ளையையும்*
*நெட்டை நெடுங்கொம்பு*
*நீள்காளை மாட்டினையும்*

ஒக்கப் பிரிந்தபின்னே
　　உள்ளம் வருந்தியதாய், 865
மிக்க அழுதபடி
　　மேனி தளர்வுற்றுத்
தள்ளாடித் தள்ளாடித்
　　தன்னந் தனியாக,

முள்ளாடும் வன்கிளையும்
　　மொய்த்த புதர்வகையும்,
உள்ளும் புறமுமாய்
　　ஓடுங் கொடிவகையும்,

விள்ளார்ந்தே ஓங்கிநிற்கும்
　　வேங்கை குறுக்கத்தி, 870
புன்னை, செருந்தி, பலா,
　　புன்கமொடு பாதிரியும்,
கொன்றையோ டாலமரம்
　　கோங்கு, விளா, மகிழம்,
பாக்கு, புளி, வேம்பு,
　　பாலையொடு முள்முருங்கை,
தேக்கு, இலுப்பை, எட்டி,
　　தேமா, கடம்பு, நொச்சி,
சந்தனமோ டாத்திமரம்,
　　சண்பகமும், பேரீந்தும், 875
முந்திரியும், நல்லிலந்தும்,
　　மூங்கிலொடு, தீயிலவம்,
நெல்லி, மருதமரம்,
　　நேர்வாகை, வன்னிமரம்,

வில்வமொடு, பிண்டி, களா,
விண்தடவும் நாவல்—எனும்

காட்டு மரவகையும்
கன்னாபின் னாவென்று,
நீட்டுங் கிளைகளொடு
நெட்டையுமாய், குட்டையுமாய், 880
ஒன்றோடு மற்றொன்(று)
உரசி உறவாடிப்
பின்னிப் பிணைந்து
பெருங்காற்றும் சூரியனும்
உள்ளே வராதபடி,
ஓங்கி அடர்ந்திருந்து,

பள்ளமுமாய் மேடுமாய்
பாதை தெரியாமல்,
நீளக் கிடக்கும்
நெடுங்காட்டி னுட்புகுந்து, 885
மாள நடக்கும்
வகைபோல் நடந்ததுவே!

கல்லார் மனம்போல்
கருமையிருள்! அவ்விருளில்
பொல்லார் மனம்போல்
புதைகுழியும் முட்புதரும்!

உள்ளுக்குள் பாம்போடும்;
அட்டை உருண்டிருக்கும்;

வெள்ளத் தொளைகளெல்லாம்
    வீற்றிருக்கும் நச்சுயிர்கள்! 890
வானை மறித்த
    முகில்களைப்போல் ஆங்காங்கே
யானை முறித்த
    மரக்கிளைகள் வீழ்ந்திருக்கும்!

நெட்டைவால் மந்தியினம்
    நீண்ட கிளைகளிலே
ஒட்டிக் கிடந்தே
    இரவெல்லாம் கூச்சலிடும்!

குட்டைத் தலையும்
    குறுங்கழுத்தும் கூனுடலும் 895
முட்டை விழியும்
    முகத்தில் அழுந்தியுள்ள
சப்பைச் சிறுமூக்கும்
    சார்ந்திருக்கும் ஆந்தையினம்
ஒப்பாரி வைத்தே
    இராமுழுதும் ஓலமிடும்!

சில்வண்டுக் கூட்டம்
    இரவில் சிலைவாங்கும்!
முல்லைப் புதர்களிலே
    மொய்த்திருக்கும் தேனீக்கள்! 900

வேங்கை உருமல்
    விலாவைக் குடைந்தெடுக்கும்!

தூங்குகின்ற மானினமோ
துள்ளிப் புதரொடுங்கும்!

உள்நடுங்கும் கும்மிருட்டில்
ஒன்றியாய்ப் பெண்கழுதை
முள்பதிந்த மேனியொடும்
முட்டிவிழுங் கால்களொடும்,
ஓட்டமாய் மென்னடையாய்
ஓரிருகல் சென்றபின்னே 905
நீட்டிப் படுக்க
நினைத்தங்கு நின்றதுவாம்!

நின்ற இடத்தில்
நெருப்பு விழியிரண்டு
தென்படவும், உள்பதறித்
தீங்குவந்து விட்டதென்று,
வல்லெனவே பாய்ந்திடக்,கால்
வாங்க முனைகையிலே,
'நில்'லெனவே ஓர்சொல்
நிலமதிரக் கேட்டதுவே! 910



## இயல் : 15

புண்பட்ட வல்லரிமா
பூண்ட துயரம், இதன்
பண்பட்ட உள்ளத்தைப்
பாகாய் உருக்கியது!

*'நில்'லென்ற சொல்கேட்டு*
*நின்ற கழுதையுடல்*
*'சில்'லிட்டுப் போனது;*
*உயிர்சென்று மீண்டதே!*

உள்ளம் திகைத்தே
    உடல்நடுங்கி நின்றிருந்த
கள்ளமிலாப் பெண்கழுதை
    காலடியில் ஒருருவம்
வந்தே உராய்ந்திடவும்,
    வாலைச் சிலிர்த்தபடி 915
உந்திக் குதித்தே
    உயிர்குலைந்து கீழ்நோக்க,
வல்லரிமா ஒன்று
    வயிற்றால் தரையூர்ந்து,
மெல்லவே வாலசைத்து,
    மேல்நோக்கிப் பார்த்தபடி
கண்களிலே நீர்வழியக்
    காலொன்றை மேல்தூக்கிப்
புண்ணொன்றைக் காட்டி, ஒரு
    பூனைபோல் காட்சிதரும்! 920

வானத்தில் வெண்ணிலவு
    வந்துஒளி சிந்தியதால்
கானத்தின் உட்புறத்தில்
    காணும் மரங்களிடை
உள்ள பொருள்கள்
    ஒளிர்ந்து விளங்கினவே!
பள்ளம்மே டெல்லாம்
    பளிச்சென்று தோன்றிநிற்கும்!

அந்த ஒளியில்
    அரிமாவின் தோற்றத்தை 925

நொந்தஉளத் தோடு
　கழுதையம்மை நோக்கிற்று!
நீண்டு சிலிர்த்து
　நிறைந்த பிடரிமயிர்!
பூண்ட தொருநீள்வால்!
　பூரித்து நின்றமறம்!

திண்ணிய கால்கள்!
　திசைகாட்டும் முள்மீசை!
கண்ணில் நெருப்புருண்டை!
　கால்களிலே கூருகிர்கள்! 930
தாமரை நாத்தொங்க
　தாடைவாய்ப் பல்தெரிய
மாமல்லன் வீறுடலம்
　மண்ணில் கிடப்பதுபோல்
ஆணரிமா தன்கால்
　அடியில் கிடந்ததனை
மாணப் பெருமையென
　எண்ணி மதித்தாலும்,
பெட்டைக் கழுதைக்குப்
　பேச்சுமில்லை; மூச்சுமில்லை! 935

வெட்டுண்டு சாய்ந்தாலும்
　வீறுமிகக் கொண்டவர்முன்
கோழையர்கள் என்றுமிகக்
　கோழையரே இவ்வுலகில்!
ஏழையர்முன் செல்வம்
　இழந்தவருஞ் செல்வரன்றோ?

நம்மின் கதைத்தலைவி
நல்ல கழுதையம்மை
இம்முறைக்கு மாறுபடல்
இல்லைதான்; என்றாலும் 940
புண்பட்ட வல்லரிமா
பூண்ட துயரம், இதன்
பண்பட்ட உள்ளத்தைப்
பாகாய் உருக்கியது.

செங்குருதி காலில்
சிறிதுசிறி தாய்க்கசிந்து
மங்கும் நிலவொளியாய்
மண்ணை நனைத்ததுவே!

சாவின் தலைக்கடையில்
வந்துதலை சாய்த்தவன்றன் 945
ஏவலுக்(கு)அச் சாவே
எதிர்குனிந்து நின்றதுபோல்,
வீறுநிறை வல்லரிமா
வீழ்த்திடுமோ என்றஞ்சித்
தேறுகிலா நெஞ்சினள்தான்
தேறுதலுக் கேங்கிவந்த
மாவரசன் தன்னை
மனத்தால் வணங்கியபின்
நாவை யசைத்து,

"விலங்கினத்தின் நாயகனே! 950
பாவை யான் என்செய்ய
வேண்டும்? பணிப்பீரேல்

இன்னுயிரும் ஈவாள், இவ்
 வேழை" —எனக் கூறியதே!

இன்னவுரை புண்ணால்
 இடர்ப்பட்டு வீழ்ந்திருக்கும்,
வல்விலங்கின் மாவேந்தன்
 வாடிநின்ற நெஞ்சினில்போய்ச்
சில்லென் றுணர்வு
 சிலிர்சிலிர்க்கச் செய்ததுவே! 955



# இயல் : 16

அன்புக் கழுதை
அரிமாவைக் காத்தசெயல்
'என்புதுமை என்புதுமை!'

***உள்ளச் சிலிர்ப்பால்,***
***உருவில் மிகத்தாழ்ந்த***
***வெள்ளைமூக் குக்கழுதை***
***முன்னிலையில் தான்வீழ்ந்(து)***
***அதனுதவி வேண்டி, முகம்***
***அங்காந்தா லும், தன்***

பதவிக்கே உள்நாணிப்
    பாவைக் கழுதையிடம்,

"அம்மா, கழுதையே!
    அஞ்சாதே! நானேதான் 960
இம்மா பெருங்காட்டில்
    எல்லா விலங்குகட்கும்
வல்லரசன்; முன்மாலை
    வந்த விடத்திலிங்குக்
கொல்லப் படவிருந்தேன்;
    கூற்றுவன்போல் வந்தொருவன்
வேட்டெஃகத்தால் சுட்டென்னை
    வீழ்த்தி யிருப்பான்காண்!

வேட்டொலியைக் கேட்டவுடன்
    வேலிக்குள் ஓடிவிட்டேன்! 965
ஆனாலும் காலில்
    அடிபட்டு வீழ்ந்துவிட்டேன்!
போனாலும் போயிருப்பேன்;
    பொல்லாத வேளையிலும்
நல்லதொரு நேரத்தால்
    நான் பிழைத்துக் கொண்டேன் காண்!

காலில்தான் நல்லஅடி!
    மற்றோ கவலையில்லை!
ஏலவில்லை ஊன்றிடவே!
    என்செய்வ" தென்(று), அரிமா 970
நோவால் மிகவருந்தி
    நொய்யவுரை செய்ததுவே!

காவாயோ என்றந்தக்
கண்கள் உரைப்பனபோல்
தோன்றிடவும், பெட்டைக்
கழுதை துடிதுடித்தே,
அண்டையிலே ஓடி
அடர்ந்து வளர்ந்த கள்ளித்
தண்டொன்றைக் காலால்
'தடக்'கென் றொடித்துவந்து 975
பொங்கிவரும் பாலையதன்
புண்ணில் சொரிந்ததுவே!

எங்கிருந்தோ வந்தே
இரங்கி யுதவுகின்ற
நற்கழுதை யம்மையின்
நல்லுள்ளம் தானறிந்து,
கற்கடின நெஞ்சுங்
கனிந்து மகிழ்ந்திடுமால்!

கள்ளிப்பால் விட்டவுடன்
புண்ணின் கடுகடுப்போ 980
உள்ளும் புறமும்
ஒருவா றடங்கிடவே,
மெல்ல எழமுயன்று
மேனி நடுங்கியதாய்
வல்லென் றரிமா
வலிவின்றிச் சாய்ந்ததுவே!

அக்கால் கழுதை
சடக்கென் றதைத்தாங்கி,

"தக்கநிலை வாய்ந்திடுமுன்
    தாங்கள் நடந்திடவும் 985
கூடா" தென வுரைத்து,
  "வல்விலங்கின் கோவேந்தே!
ஆடா(து) அசையா(து)
    அயர்ந்திருங்கள் காலைவரை.
நாளை விடியட்டும்!
    தாங்கள் நலமுற்றால்
மீளுவோம்" என்று
    மிகநயந்து வேண்டியதாம்!

'அந்த இராத் தங்கி
    அடுத்தநாள் காலையிலே 990
சொந்தவிடம் செல்வோம்
    எனக்கழுதை சொன்னவுடன்
வல்லரிமா ஒப்பியே,
    வாகாய்ப் படுத்துறங்க
நல்லவிடம் ஒன்றையெண்ணி
    நாற்புறமும் கண்சுழற்ற,
அக்குறிப்பைத் தானுணர்ந்த
    அன்புக் கழுதையம்மை
தக்கதென ஓரிடத்தைத்
    தேடித் தழை, இலைகள் 995
சேர்த்துக் குவித்திட்டுச்
    செப்பமுறத் தாம்பரப்பி
ஆர்த்த பிடரி
    அடலேற்றைப் போயணைத்துக்
கொண்டுவந்து மெல்லக்
    குனிந்து படுக்கவைத்தே

அண்டையிலே தானமர்ந்து
புண்ணிருந்த அக்காலை,
முன்போய்ந்த தாய்மை
முகிழ்த்து மலர்ந்ததுவாய்— 1000
அன்பாகத் தொட்டெடுத்தே,
அப்படியே தன்தொடைமேல்
வைத்துக், கால் ஆட்டி
வலிதோன்றா மல்செய்து
மொய்த்தவிழி நீளிரவும்
மூடா திருந்ததுவே!

முன்பின் அறியாத
தன்பால் முழுமையாய்
அன்பைச் சொரிந்ததையும்
அன்றை இராமுழுதும் 1005
தன்புண் வலியடங்கத்
தான்பேணி நின்றதையும்
பன்முறையும் எண்ணிப்
பலவா றுளமகிழ்ந்து
காட்டு விலங்கரசன்
கண்ணயர்ந்து தூங்கியது!

நீட்டியகால் தான்மடக்கா
நீளிரவும் தூங்காமல்
அன்புக் கழுதை
அரிமாவைக் காத்தசெயல் 1010
'என்புதுமை என்புதுமை'
என்றே 'கிசுமுசு'த்துக்

*பாவலரேறு பெருஞ்சித்திரனார்*

கோட்டுக் கிளிகள்,
　　குயில், குருவி, காக்கையெனும்
காட்டுப் பறவையெலாம்
　　காலைவரை ஆர்த்தனவாம்!
பாக்கள் மிழற்றினவாம்;
　　பண்ணிசைத்துப் பாடினவாம்!
தூக்கமில்லா நற்கழுதைத்
　　தொண்டைப்பா ராட்டினவாம்!



# இயல் : 17

பீடுற்ற இன்பத்தைப்
பேசி முடிவதுண்டோ?
ஈடற்ற தன்னிறைவால்
ஏகிற்றே பெண்கழுதை!

**காலை மலரும்முன்**
**கண்மலர்ந்த நற்கழுதை**
**வாலை மெதுவாக**
**வல்லரிமா தன்னுடல்மேல்**

நீவிக் கொடுக்க,
    நெடுந்தூக்கம் தான்களைந்து,
தாவி எழுந்துநிற்கத்
    தன்காலை ஊன்றியதும்
பொத்தென்று மீண்டும்
    பொதிபோல வீழ்ந்ததுவாம்! 1020

மெத்தென்(று) இலைதழைகள்
    மேவி யிருந்ததினால்
ஒன்றும் அடியில்லை!
    உள்ளம் பதறிட்டவே
நின்ற கழுதையம்மை
    நீள நினைத்துப்பின்
தக்கதென ஓர்முடிவைத்
    தான்தேர்ந்து, வல்லரிமா
பக்கம் அமர்ந்து
    பணிவாக

"ஐயாவே! 1025
எப்படியும் உங்கள்
    இருப்பிடத்திற் கேகுவதே
இப்பொழுது தக்கதென
    எண்ணுகின்றேன்; நீங்களிதைத்
தப்பென்று கொள்ளாமல்
    தக்கதென்றே எண்ணி,மனம்
ஒப்புவிரேல் நானொன்(று)
    உரைக்க விரும்புகின்றேன்..."

—என்றே கழுதையம்மை
ஏறெடுத்துப் பார்த்திருக்க, 1030
"நன்(று);அதனை நீயும்
நவில்" — என்றே வல்லரிமா
ஒப்பியதும், நற்கழுதை
உள்ளம் நெகிழ்ந்ததுவாய்ச்
செப்பியது:

"நீங்களிந்தச்
சின்ன கழுதையின்
வல்முதுகின் மேலேறி
வாகாய் அமர்ந்துகொண்டு
செல்கின்ற பாதையினைச்
செப்பமுறக் காட்டுவிரேல் 1035
எத்தனைக்கல் என்றாலும்
இன்பமெனச் செல்வேன்,யான்!
ஒத்ததுங்கள் உள்ளமெனில்
'உம்'மென்று சொல்லுங்கள்"

—என்றே கழுதை
இரக்கமொடு கேட்டதுவே!

வென்றுநின்ற பேரன்பால்
வெள்ளிமூக் குக்கழுதை
வல்லரிமா நெஞ்சத்தில்
வானளவாய்த் தானுயர்ந்து 1040
சொல்லரிய பேருருவாய்த்
தோன்றிச் சுடர்வீசி

நின்றதனை யாரறிவார் ?
 நேயத்தை யாருரைப்பார் ?
ஒன்றும் மறுப்பிலதாய்
 'உம்'மென் றிசைந்ததது !

மாக்களுடை வேந்தன்
 மனமிசைந்த நோக்குணர்ந்தே
ஊக்கமுற்ற பெண்கழுதை
 முன்போய் உடல்தாழ்த்தி 1045
முக்கி முனகி
 முயன்று முதுகேற்றித்
தக்கபடி காலூன்றித்
 தானெழுந்து நின்றதுவே !

வல்விலங்குக் கூட்டமெல்லாம்
 வால்மடக்கித் தாம்வணங்கும்
கொல்விலங்கை — கூற்றின்
 கொடிய விலங்கரசைப்
பெட்டைக் கழுதையொன்று
 பேரன்பால் வீறடக்கிக் 1050
கட்டிவைத்த முட்டையைப்போல்
 காற்றடைத்த தோலேபோல்
வல்முதுகில் ஏற்றி
 வழிநடந்த காட்சியினைக்
கல்முழையுள் முட்புதருள்
 கண்ட முயலினங்கள்,
கோட்டுக் குரக்கினங்கள்,
 குள்ள நரியினங்கள்,

காட்டெருமைக் கூட்டங்கள்,
    கால்நெடிய மானினங்கள், 1055
வான்பறவைக் கூட்டம்—எலாம்
    வாயடங்கி மெய்யடங்கிக்
கூனிக் குறுகிநின்று
    கூர்த்தவிழி மூடாமல்
பார்த்து வியப்புற்றுப்
    பாதையிடை நில்லாமல்,
சேர்த்தொன்றை யொன்று
    சிறகாலும் காலாலும்
கட்டித் தழுவிக்
    கலக்கமுற்று நின்றிருந்த! 1060

ஆண்டு பலவாய்
    அழுக்குத் துணிகளையே
வேண்டுமட்டில் ஏற்றிவைக்க
    வீட்டிற்கும் ஆற்றிற்கும்
மெத்தச் சுமந்துழைத்து
    மேனியெலாம் கூசிநின்ற
சொத்தைச் சுவைக்கே
    அரிமாவைத் தான்சுமக்கும்
பீடுற்ற இன்பத்தைப்
    பேசி முடிவதுண்டோ? 1065
ஈடற்ற தன்னிறைவால்
    ஏகிற்றே பெண்கழுதை!



# இயல் : 18

குன்றுபோல் அன்பு
குவித்தநெஞ்சம் உன்நெஞ்சம்!
நல்லறிவு நற்கடமை
வாய்த்திருக்கும் நல்லவள்நீ!

முட்கள் செறிந்தபுதர்,
    மொய்த்த செடிகொடிகள்,
புட்கள் நுழையாப்
    பொதிந்த தழையிலைகள்,

## கழுதை அழுத கதை

ஊடே கழுதை
உடம்பை நெளித்தபடி
காடே வியப்படையக்
காட்டரசன் தன்னைச் 1070
சுமந்துசெலும் போதே,

தன்
நெஞ்சம் சுமந்த
சுமையை—பழங்கதையை—
சொந்த வரலாற்றை.
வல்லரிமா நெஞ்சை
வருத்திப் பிழிந்தெடுக்கும்
சொல்லுருவாய்க் காட்டிச்
சுமைமறக்கச் சென்றதுவே!

பெண்கழுதை சொன்ன
பெருங்கதையைக் கேட்டபடி 1075
எண்ணிரண்டு கற்கள்
இரண்டும் கடந்தபின்னைக்
காட்டுச் செறிவிலொரு
கற்பாறை தென்படவும்
நீட்டுங் கதைநிறுத்தி
'நில்'லென்ற(து) ஆணரிமா.

"வெள்ளம்போல் நெஞ்சழுத்தி
வெற்பாய் உயிர்கனத்த
உள்ளச் சுமையை
உங்கள்பால் மாற்றியதால் 1080

என்முதுகின் வன்சுமையை
இம்மி உணரவில்லை"—

என்று கழுதை
இனிதுரைக்க, வல்லரிமா,

"நன்று பெண்ணே! நீ வாழ்க!
நான்உன்போல் கண்டதில்லை!
குன்றுபோல் அன்பு
குவித்தநெஞ்சம் உன்நெஞ்சம்!
நல்லறிவு நற்கடமை
வாய்த்திருக்கும் நல்லவள்நீ! 1085
சொல்லரிய துன்பச்
சுமையோடு என்னையும்நீ
தூக்கிச் சுமந்து
துயர்போக்கி வந்தாய்காண்!
காக்கின்ற மாவரசன்
தன்னைநீ காத்துவிட்டாய்!
காட்டு விலங்கரசன்
கட்டளைகேள்! இன்றுமுதல்
நாட்டுவிலங் கானஉன்னை
நல்லமைச்சர் ஆக்குகின்றேன்! 1090

ஈங்கிதுகாண், பெண்ணே!
இருப்பைக்கா(டு) இக்காடு
பாங்காய் இதன்பரப்பைப்
பார்த்திருக்க மாட்டாய், நீ!
சொல்லுகின்றேன் கேள்;அதன்முன்
என்னைச் சுமையிறக்காய்!

எல்லா விலங்களைத்தும்
　　மாலைக்குள் இங்குவரும்
உன்னை அறிவிப்பேன்;
　　உன்பெருமை கூறிடுவேன்; 1095
என்னமைச்சாய்த் தேர்ந்த
　　தெடுத்துரைப்பேன்"— என்றதுவே!



# இயல் : 19

அன்பரீர்! இதுகழுதை
ஆனாலும் மாந்தரினும்
அன்பு மிகுந்தது

**வன்முதுகைத் தாழ்த்த, அங்கு**
**வல்லரிமா கீழிறங்க,**
**மென்மனத்து நற்கழுதை**
**மீண்டும் நிமிர்ந்ததுவாம்!**

கீழே இறங்கியதும்
காடே கிடுகிடுக்க,
பாழ்வெளியைத் தாண்டியொலி
பாய, இடிக்குரலில் 1100
வன்முழக்க மிட்டு, — "இங்கே
வாரீரோ தோழர்காள்!" —
என்றுரக்கக் கத்தியது!
எல்லாப் புறத்திருந்தும்
ஒன்றொன்றாய்ப் பெண்ணரிமா,
உளிவுகிரின் வெம்புலிகள்,
குன்றொத்த யானையினம்,
குள்ள நரியினங்கள்,
ஒட்டைச் சிவிங்கியினம்,
ஓநாய், கரடியெலாம் 1105
மொட்டைப் பெரும்பாறை
முன்வந்து கூடினவே!

ஆணரிமா அங்கே
அமர்ந்திருக்கப் நற்கழுதை
காணாமற் போன, தன்
குட்டி தனைநினைந்தே
அன்பால் மருகி
அகத்தே மிகவருந்தித்
துன்புருவாய் அக்கழுதை
நின்றிருக்கும் தோற்றத்தைக் 1110
கண்ட விலங்கினங்கள்
'காட்டரசன் உண்ணுதற்குக்
கொண்ட இரைபோலும்'
என்றெண்ணிக் கொண்டனவே!

பின்னர் விலங்கரசன்
 பேசநின்று, "மாக்களே!
இன்னே இதோ நம்மின்
 கண்முன் இருக்கின்ற
பெண்கழுதை தன்னைப்
 பிழையாக எண்ணாதீர்! 1115

உண்கின்ற நல்லிரையென்
 றெண்ணி உவக்காதீர்.
அன்பரீர்! இதுகழுதை
 ஆனாலும் மாந்தரினும்
அன்பு மிகுந்ததுவாய் —
 நானும் அடிபட்டுச்
சாய்ந்து கிடக்கையிலே
 சாகா தெனைக்காத்துத்
தாய்போல் பரிந்தெடுத்துக்
 காட்டுத் தழைபிழிந்து, 1120
கண்ணுறங்கா தோரிரவு
 காத்திருந்து காற்பட்ட
புண்ணாற்றி இங்கே
 பொதிபோல் சுமந்துவந்தே

உங்கள் முன் விட்டதனை
 உங்களிலே யார்செய்வார்?
உங்கள்மேல் ஆணை!
 உலகின்மேல் காய்கின்ற
வெங்கதிர்மேல் ஆணை!
 விளையாட்டிற் கானாலும் 1125

இங்கிதற்கே உம்மால்
இடர்நேரக் கூடாது!

தப்பித் தவறித்
தவறுசெய்ய நேர்வோரை
ஒப்பிக்க என்னிடத்தில்;
ஊனைக் குதறுவன், யான்!
எச்சரிக்கை! எச்சரிக்கை!!
இன்னொன்றைக் கேளுங்கள்!
மெச்சி இதற்கமைச்சர்
மேற்பதவி தந்துவிட்டேன்! 1130
இங்கினிமேல் இவ்வமைச்சர்
இட்டதுதான் சட்ட"மெனப்
பொங்கும் மகிழ்ச்சியிலே
புல்லரிக்கக் கூறிப்பின்,
"இப்போது நம் அமைச்சர்
இங்குநாம் வாழ்வதினி
எப்படியென் றே, நன்(கு)
எடுத்துரைப்பார் கேட்பீர்கள்"

— என்றுரைக்கக் கூறி
இடக்கைப் புறந்திரும்பி, 1135
நின்ற கழுதையினை
நேர்வரவும் கேட்டதுவே!



# இயல் : 20

கீழ்மை எனில்என்ன ?
கிஞ்சித்தும் நாமவர்க்குத்
தாழ்மை இலையே ?
தரங்கெட்டுப் போனதெதில் ?

பெட்டைக் கழுதைக்குப்
  பேச முடியவில்லை !
கட்டைக் குரலால்
  கனைத்துச் சரிசெய்து,

"வல்விலங்குப் பேரரசே!
வந்திருக்கும் நல்விலங்கீர்!
சொல்விளங்காப் புல்லியளைச்
சொல்லென்றார் நம்மரசர்!" 1140

என்ன உரைத்திடுவேன்?
ஏதுமில்லாப் பேதையள் நான்!
தின்ன உறங்கத்
திரிந்தலையும் வாழ்க்கையர் நாம்!
சொன்னாலும் கேட்டாலும்
சோர்வுமிகும் நம்கதையில்!
என்னவோ என்கதையில்
எள்ளளவும் இன்பமில்லை.

சாகாமல் வாழ்ந்து
சலித்துப் புளித்தவள், நான்! 1145
வேகாத நெஞ்செனக்கு!
வீழ்ந்துபடாக் கல்லுடலாள்!

இன்னபடி யால்தானே
இங்குவந்து நான்சேர்ந்தேன்!
அன்னபடி வந்ததிலோ
ஆழாக்கும் இன்பமில்லை!
ஒன்றேஒன் றென்றே
உலக்கைக் கொழுந்தாக—
நன்றாய் மதர்மதர்ப்பாய்—
நான்வளர்த்த பொன்மகளைப் 1150
பாதி வழியில்
பறிகொடுத்த முண்டம்நான்!

ஏதிலியென் னோடு, ஓர்
　　எருது துணையாக
வந்திருந்த தத்துணைக்கும்
　　வாய்க்கரிசி போட்டவள், நான்!

நொந்திருந்த என்னைத்தான்
　　நுங்கள் விலங்கரசர்
காத்துக் கரைசேர்த்துக்
　　காதாரப் பாராட்டிச் 　　　　1155
சீத்துப்பூத் தென்று, இச்
　　சிறியவளைத் தன் அமைச்சாய்க்
கொண்டையத்தில் தூக்கிக்
　　குந்தவைத்து விட்டார்கள்!

பண்டைப் பழம்பிறப்பு
　　பாதியிலே தீர்ந்துபோய்ப்
புத்தம் புதுப்பிறப்பாய்
　　வந்து புலர்ந்து விட்டேன்!
நித்தமினி உங்களுடன்
　　நேயப் புதுவாழ்க்கை 　　　　1160
வாழ்வதற்கே எண்ணி விட்டேன்!
　　நம்மின் வருங்காலம்
தாழ்வின்றிப் போகும், இனி!
　　தாழ்ச்சியுற மாட்டோம், நாம்!

காட்டு விலங்கினமே
　　என்றாலும் கற்றுயர்ந்த
நாட்டுமக்கள் தம்மிலும்நாம்
　　நல்லஇனம்; நல்ல மனம்,

நல்லரசு, நல்லநெறி,
　நல்லகுடி — என்றபடி　　　　1165
எல்லாரும் பேசி
　இறும்பூது கொள்ளுமாறு —
கட்டமைத்துக் கொண்டு
　கடமையினை மேற்கொண்டு
திட்டமிட்டு வாழ்ந்திடுவோம்!
　தீங்கின்றி நாம் மகிழ்வோம்!

ஓங்குயர்ந்த நல்லன்பீர்!
　ஒப்புகின்றீர் தானே? — என்று
ஏங்குகின்ற நன்னெஞ்சால்
　எக்களித்துக் கேட்டிடவே　　　　1170
ஆங்கிருந்த மாக்களெல்லாம்
　ஆம்ஆம்என் றொப்பினவே!

தீங்கிறந்த நல்லுளத்துத்
　தென்னாட்டுப் பெண்கழுதை
பின்னும் குரலுயர்த்திப்
　"பேரன்பு சான்றவரே!
முன்னர்யான் வாழ்ந்திருந்த
　ஊரின் — முழுக்கதையை —
நாமறிந்து கொண்டால்தான்
　நல்ல அரசமைக்க　　　　1175
ஏமநெறி நாம்பெறுவோம்"
　என்றுணர்த்தி மேலுரைக்கும்!

"கேளுங்கள்! நல்விலங்கீர்!
　கீழ்மை உயிர்கள் — என

ஆளும் கல் வன்மனத்து
  மாந்தர் நமை அழைப்பார்!
கீழ்மை எனில்என்ன?
  கிஞ்சித்தும் நாமவர்க்குத்
தாழ்மை இலையே?
  தரங்கெட்டுப் போனதெதில்? 1180

கண், காது வாய்மூக்கு
  கால்கைகள் அன்னவர்போல்!
உண்மையிலே சொன்னால்
  உறுப்புகளால் நாம்பெரியோம்!
பெண்,ஆண், பிறப்பு, இறப்போ
  பேசிடிலோ ஓரமைப்பே!
மண்மேல் அவர்க்கிருக்கும்
  மாண்பெல்லாம் நாம்கொண்டோம்!

வாழ்வெல்லாம் நாமும்
  வருந்தி உழைக்கின்றோம்! 1185
தாழ்வான புல்வகைகள்
  உண்டே தழைக்கின்றோம்!
நம்மில் ஒருசிலரே
  ஊனுணவை நச்சுபவர்!

செம்மை நெறிவாழ்க்கை!
  சீர்பெற்ற நல்லமனம்!
அன்னவர்போல் பேச்சில்லை!
  ஆருக் கதுவேண்டும்?
சொன்னசொல்லே மக்களுக்குள்
  சூதாய் அமைந்திலையோ? 1190

பேச்சென்ன பேச்சு!
    பெரும்பாலும் மக்களிடை
பேச்சடக்கம் கொண்டவரைப்
    பேரறிஞர் என்கிலையா?
அந்தப் படிக்கே
    அறிஞரென்பார் நாம்தாமே!
சொந்தப் படிப்பெல்லாம்
    சூழ்ச்சிக்கே தானுதவும்!

ஒப்பற்ற கொள்கை
    உழைத்துண்போம் என்பதுவே! 1195
தப்பலுண்டா அக்கொள்கை,
    நம்வாழ்வில்? தாழ்தலுண்டா?
கொள்ளை யடித்துக்
    குவிக்கின்ற வன்செயல்மேல்
வெள்ளை யடித்தே
    அறமென்று வீம்புகின்ற
மொள்ளைப்பேச் செங்களிடை
    முள்ளின் நுனியுண்டா?
நொள்ளை வழக்கத்தை
    மாந்தரைப்போல் யார்தொடர்வார்? 1200

அன்புண்டா? நேர்மையுண்டா?
    ஆசையற்ற தொண்டுண்டா?
தென்புண்டா நெஞ்சில்?
    திருடாத எண்ணமுண்டா?
ஒற்றுமை உண்டா?
    ஒழுங்குண்டா மக்களிடை?
வெற்றுச்சொல் வீச்சல்லால்
    உண்மை வினையுண்டா?

கற்றவர்கள் என்பவர்க்கே
கள்ளம் மிகுந்திருந்தால், 1205
மற்றவர்கள் எவ்வகையில்
மாண்புயரப் பெற்றவர்கள்?

காதல்,கா தல் எனவே
யாண்டும் கதைக்கின்றார்!
காதலுக்கு மானைக்
களிற்றை உவமைசொல்வார்!
நம்மின் சிறந்திருக்கும்
நல்பறவைக் கூட்டத்தில்
தம்மினுளக் காதலுக்குத்
தாமுவமை தேடிடுவார்! 1210
மாடப் புறவென்பார்!
தோகை மயிலென்பார்!
கூடப் புணைந்துரைப்பார்;
கூடிப் பிரிந்திடுவார்!

அன்பு மணமென்றே
ஆர்ப்பாட்டம் நேர்வதுண்டு!
பின்பு குடும்பமென்று
பேச்சுக்கு வாழ்வதுண்டு!
ஆணுக்குப் பெண்ணடிமை;
ஆணடிமை தானுமுண்டு! 1215
வீணுக்குப் பீற்றுவார்!
வெற்றுப் புலன்வாழ்க்கை!
உள்ளமெலாம் கள்ளம்!
உழைப்பெல்லாம் சோம்புவதே!
பள்ளமெலாம் மேடென்ற
பேச்சே பரந்திருக்கும்!

கொண்டவன்மேல் அன்பு
குடிகொண் டிருப்பதுபோல்
பெண்டாட்டி பேசிடுவாள்!
உள்ளம் பிளந்திருக்கும்! 1220
அவ்வாறே அன்னவள்மேல்
அன்பு மழைபொழிவான்!
ஒவ்வா ஒழுக்கம்
ஒருநூறு கொண்டிருப்பான்!
இல்லறம் என்றே
இதனை இயம்பிடுவார்!
நல்லறத்து மாக்களே!
நானும் இருக்கின்றேன்!

என்னவரைக் கண்டதுதான்!
இந்நாள் வரைபிறரை 1225
அன்ன படிநினைந்து
ஆட்பட்ட பேச்சில்லை"
— என்றுரைக்கும் போதே
இடைநிறுத்தித் தன்நெஞ்சில்
நின்ற கணவன்
நினைவில் உளந்தோய்ந்து,
கண்களிலே நீர்வடியக்
காதில் கனல்பாயப்
பெண்களிலே தெய்வப்
பெருங்கழுதை பின்னுரைக்கும்! 1230



# இயல் : 21

எத்தனைப்பேர் வந்திவ்
வுலகத் திழிவகற்ற
எத்தனையாய்ச் சொன்னார்!
எதுவும் பயனிலையே!

"இன்ன கருத்தெல்லாம்
இங்கிருந்த வாறே, நான்
சொன்னேன், என் றெண்ணாதீர்.
சொந்தக் கணவனுடன்

மக்களிடை வாழ்ந்திருந்தேன்.
மாதமொன்றா ஆண்டொன்றா?
தக்கபடி பல்லாண்டு
வாழ்ந்திருந்து தான், உரைப்பேன்!

என்னுரையைக் கேட்கும்
எவரேனும்—இன்றன்று— 1235
பின்னரே னும்—ஒருவர்
பீற்றலுரை என்பாரோ?
சொன்ன கருத்தைப்
பிழையென்று சொல்லுதற்கே
முன்னே வருவாரோ?
மாந்தரின் முன், கேட்பேன்:

— உங்கள் இனப்பெருமை
என்னென் றுரையுங்கள்!
பங்கறைப் பெண்கழுதை
கேட்பேன், பகருங்கள்! 1240
சூளுரைத்துக் கேட்கின்றேன்;
சொல்லுங்கள்! என்சொலினும்
தூளுரையாய்ப் போகும், அது, என்
தூய்மையுரை முன்னாலே!

ஆன்ற அறமென்பீர்!
அப்பால் பொருளென்பீர்!
மூன்றனதாய் இன்பமென
நூலுள் முழக்குகின்றீர்!

நீவிர் முழக்குகின்ற
நெட்டையறம் என்ன ? அதன் 1245
ஈவுநிலை என்ன ? என்றே
எங்கட் குரைப்பீரோ ?

உங்களுக்குள்—உங்கள்
ஒருவரையே தாழ்த்துகின்றீர் !
எங்கள் இனத்திலில்லா
இந்நிலையோ உங்கள் அறம் ?

பல்லோர் பொருளைப்
பறித்தொருவ ரே, வாழ்வீர் !
சொல்லுங்கள் ! ஈதோ
பொருளென்று சொல்லுவது ? 1250

அன்பெனவே பேசி
அளவில்லாப் பெண்டிரையே
இன்பத்திற் கேய்க்கும்
இதையோ, நீர் இன்பமென்றீர் !

கள்ளம், கரவு, இழிவு !
காலமெல்லாம் பொய்வாழ்க்கை !
'உள்ளம்' என்றே இவ்விடையில்
ஒங்கிக் கதறுகின்றீர் !
உங்களிலே, கோடியிலே,
'உள்ளம்' எனுமுயர்ந்த 1255
பொங்குதமிழ்ச் சொல்லின்
பொருள்—ஒருவர் கூறுவரா ?

பெண்கழுதை கேட்கின்றேன்;
  பேசட்டும் மக்களென்பார்!
உண்கவளத் திற்காக
  உள்ளத்தை விற்கின்ற
மக்களையே கண்டிருப்பேன்!
  மாண்புள்ளம் கொண்டுயர்ந்த
தக்கார் ஒருவரை, என்
  தாழ்வான வாழ்க்கையிலே 1260
கண்களிலும் கண்டதில்லை!
  காதாலும் கேட்டதில்லை!

பெண்களைப் பற்றியவர்
  பேசுவதைக் கேட்டாலோ,
தெய்வப் பொலிவிருக்கும்;
  தீதுகளை ஆய்ந்தாலோ,
பொய்வடிவம் பட்டுவிடும்;
  போலிவுரு வாகிவிடும்!

"முன்னோர்கள் சொல்லிவைத்த
  முதுரைகள் பொய்யென்பீர்! 1265
பின்னோர்கள் உங்களுரை
  பீழைசொல்ல மாட்டாரோ?
இப்படியே முன்பின்
  இழுபறியாய் வாழ்வதல்லால்
ஒப்பி, நிகழ் காலத்தில்
  ஒன்றாய்—உருப்படியாய—
தப்பேதும் இன்றித்
  தனிச்சிறப்பாய் வாழ்வதெக்கால்?

இப்பேதை கேட்கின்றேன்;
　　என்னதான் சொல்கின்றீர் ?　　　　1270

தெய்வத் திருக்குறளைத்
　　தேர்ந்த அறநூலாய் —
உய்வுதரும் வாழ்க்கைக்கே
　　உற்ற உயர்நூலாய்க்
கொண்டாடிக் கற்கின்றீர் !
　　கொள்கை புதைத்துவிட்டீர் !
திண்டாடித் தேய்ந்து
　　தெருவாடி நிற்கின்றீர் !

கற்பதனால் என்பெருமை ?
　　என்னபயன் ? கற்பவற்றில்　　　　1275
நிற்பதனால் அன்றோ
　　நிகழ்பயனைக் காண்பீர்கள் !

எல்லா உயிர்க்கும்
　　பிறப்பொக்கும் என்றுகற்றீர்.
கல்லாத எங்களுக்குள்
　　காணாத வேற்றுமைகள்
பொல்லாக் குலச்சண்டை
　　போட்டுடைத்துக் கொள்கின்றீர் !
நல்லதெது ? தீயதெது ?
　　நானுரைக்க வேண்டுவதோ ?　　　　1280

கல்வியினால் தீமை
　　கழன்றொதுங்க வேண்டாவோ ?

நல்விதையை ஊன்றினால்
    நச்சுக் கனிவிளைமோ ?

கல்லார்க்கு மேலாகக்
    கற்றோர்என் பாரிடத்தே
பொல்லாங்கு, தீமை,
    புகலரிய தாழ்வுமனம்,
எல்லாமும் வந்தே
    எழில் குலுங்கப் பூத்திருந்து, 1285
நல்லபடி காயாய்க்
    கனியாய் நனிவிளைந்து,
மண்ணுலகந் தன்னையே
    மாசுறுத்தி விட்டனகாண் !
எண்ணியெண்ணி ஈங்கிவற்றால்
    ஏங்காத நெஞ்சமுண்டோ ?

எத்தனைப்பேர் வந்திவ்
    வுலகத் திழிவகற்ற
எத்தனையாய்ச் சொன்னார் !
    எதுவும் பயனிலையே ! 1290

இத்தனைநாள் மாந்தர்க்
    கெடுத்துரைத்த நல்லுரையில்
பத்திலன்று—நூறிலன்று—
    பத்தா யிரத்திலொன்று
எங்களுக்குச் சொல்லி
    யிருப்பாரேல் எங்களினம்

இங்கிப் படியா
    இழிவடைந்து போயிருக்கும் ?

கங்குல் கரைந்து
    கதிரொளியும் பாய்வதுபோல்    1295
பொங்குணர்வால் வாழ்க்கை
    புலர்ந்துமணம் வீசாதா ?"



# இயல் : 22

"எம்மண்ணில் வந்தோன் —
எமையிழித்தோன் — தன்னைப் போய்க்
கட்டி யிழுத்துவா!"

—என்று பலவாறாய்
மாந்தர் இழிவெல்லாம்
நின்ற விலங்குகள்முன்
நீள உரைத்திடுங்கால்;

கூட்டத் திடைநுழைந்தோர்
　குள்ளநரி ஆங்குவந்து
வாட்டத் துடன்நிற்க,
　"வந்ததென்ன? கூறிடுவாய்" 1300

என்றே அரிமா
　இடிக்குரலில் கேட்டதுவாம்!
நின்ற நரிக்குக்
　கழுத்தில் நெடுங்காயம்!
காயத்தில் செங்குருதி
　இன்னும் கசிந்திருக்கும்!
வாயருகில் கொஞ்சம்
　குருதி வடிந்திருக்கும்!
குள்ளநரி மெல்லவே
　கூறுதற்கு வாய்திறந்து, 1305

"முள்ளென் பிடரிமயிர்
　மொய்த்தபெருந் தோளரசே!
என்னென்று சொல்லுவேன்
　என்துயரை?" என்றிடவும்,
"என்னே உளறுகிறாய்?
　ஏதென்று சொல், உடனே!"
என்றரிமா கேட்க
　எதிர்ந்த நரிநடுங்கி,
ஒன்றொன்றாய்ச் சொல்லவிழ்த்தே
　ஊளையிட்டுத் தானுரைக்கும்: 1400

"வல்ல விலங்கரசே!
　வானடர்ந்த காட்டிலுள்ள

எல்லா விலங்குகளும்
ஏற்றமுற வாழ்ந்துவர
நல்லரசு செய்து
நலங்காத்து நிற்கின்றீர் !
புல்லொன்றும் தங்களது
போக்கிலெதிர் நிற்காதே !
ஈங்கிப் படியாய்
இருக்கையிலே தான், மன்னா, 1405
ஆங்கொருவன் காட்டிற்
கதிகாரி என்கின்றான்....."

— என்றுரைத்து மேலும்
இழுத்துரைக்கப் போகையிலே,
நின்று, அரிமா, "ஏடா ! ஓ !
என்ன நினைக்கின்றாய் ?
மன்றிதுவாம்; எண்ணிக்கொள் !
மற்றிங் குளறாதே !"
என்றே இடிக்குரலால்
எண்டிசையும் தாக்கியது ! 1410

கூழை நரிநடுக்கங்
கொள்ள, உடல்வெயர்க்க
"ஏழையேன், என்சொல்லில்
ஏதும் பிழையில்லை;
இங்கிருந்து நேர்வடக்கில்
ஈரிரண்டு கல்தொலைவில்
பொங்குபுனல் தேங்கிப்
பொழிலொன்றும் உள்ளது; அங்குத்

தாழை விரிந்து
தரைமூடிக் கொண்டிருக்கும்! 1415

வாழை செறிந்திருக்கும்;
வாகை நிழல்கவிக்கும்!
அந்தமரக் காவில்
அடியேன் அமர்ந்திருந்தேன்!
வந்ததங்கே வால்சுழற்றி
வன்காளை மாடொன்று!

கூர்த்தவிரு கொம்புகளும்
கொல்லுமிரு வேல்விழியும்
ஆர்த்தவொரு பேரொலியும்
ஐயாவே, என்சொல்வேன்! 1420

வந்துநின்ற மாட்டின்
வரலாறு கேட்டதற்குத்
தந்த உதையாலென்
தாடை கிழிந்ததையா!
கொம்பொன்றால் என்கழுத்தில
குத்திவிட்ட காயமிது!

வம்புவரு மென்றேநான்
வாயுந் திறக்கவில்லை;
மாடுவந்து தாக்கியதும்
மன்னா, வருத்தமில்லை! 1425
காடெனக்குச் சொந்தமென்று
கத்தியது தான்வருத்தம்!

பேரரசே! உங்கள்
 பிடரிக்கு முன்னாக
ஆர்வந்து நின்றுரைப்பார்?
 அவ்வா றிருக்கவொரு
காளைமா டென்றன்
 கழுத்தை முறிப்பதுவா?
ஆளை அனுப்பி
 அழைத்துவரச் சொல்லுங்கள்! 1430

தக்கபடி தண்டம்
 தரவேண்டும், வேந்தே!"— என்(று)
ஒக்கபடி குள்ளநரி
 ஓங்கி உரைத்திடவே,
காட்டுவேந் தற்குக்
 கழுத்துமயிர் ஆடியது!
நீட்டுமுக மீசை
 நுனிநீர் அரும்பியது!
நெற்றிமே லேறியது!
 நேர்நின்ற கண்விழிகள்! 1435

முற்றிய வன்சினத்தால்
 மூக்குத் தொளைவிரியச்
செம்மண் முகமாறிச்
 செவ்வானம் போல்சிவக்க,
"எம்மண்ணில் வந்தோன் —
 எமையிழித்தோன் — தன்னைப் போய்க்
கட்டி யிழுத்துவா"
 என்றோர் களிற்றுக்குக்
கட்டளை யிட்டகுரல்
 காட்டை உலுக்கியதே! 1440

கட்டி இழுத்துவரச்
 சொன்னவொரு கட்டளையைக்
கிட்டநின்று பெண்கழுதை
 கேட்டவுடன், தன்நண்பன்
காளையைத்தான் குள்ளநரி
 கண்டிருக்க வேண்டும்; ஒரு
வேளை யதுவாய்
 இருந்துவிட்டால், வீண்வம்பு;
வல்லரிமா அவ்வுயிரை
 வாங்காமல் போகாது; 1445

"நல்லபடி நாம்காக்க
 வேண்டு"மென நற்கழுதை
எண்ணித் துணிந்துடனே,
 "எம்மரசே! இக்களிற்றின்
கண்ணிலது பட்டால்
 கவனமொடு பார்த்தழைத்துக்
கொண்டுவரச் சொல்லுங்கள்!
 குற்றத்தை நன்காய்ந்து,
தண்டனையை நாமே
 தரவேண்டும்" என்றுசொல்ல, 1450

"ஆமாமாம்! என்றே
 அரிமாவும் அஃதுரைத்துப்
போமாறு கூறக்
 களிறிசைந்து போனதுவாம்!



# இயல் : 23

'ஆ'வென்று கூச்சலிட்டே,
"அம்மா, மகளே, நீ
வந்தாயா? எங்கிருந்தாய்?
வாழாத போக்கிலிநான்!"

வெங்களிறு போனவுடன்
வெள்ளிமுக் குக்கழுதை
தன்கதையை மீண்டும்
தனித்து நினைவூட்டிக்

காட்டரசன் தன்பால்
கனிவாய் எடுத்துரைக்க 1455

மாட்டைக் கொணர்தற்கு
மற்றுமிரு யானைகளைக்
காட்டரசன் உய்த்ததுவாம்!
அந்தக் களிறுகளும்
காட்டை அலசுதற்குக்
காற்றாய்ப் பறந்தனவே!
பின்னர் விலங்கரசன்
பேரவையை ஒத்திவைத்தான்!
மன்னன் எழுந்தவுடன்
மற்ற விலங்குகளும் 1460

தந்தம் இருப்பிடத்தைத்
தாமடைந்த! பெண்கழுதை
சொந்த மகள்நினைவாங்
குள்ளம் சுரந்தெழவே,

"எங்கே இருப்பாளோ?
என்னதுயர் பட்டாளோ?
இங்கேநான் வந்ததனை
எவ்வா றறிவாளோ?
காளைவர நேர்ந்ததுபோல்
காணக் கிடைப்பாளோ? 1465

காளைமா டாங்கொருகால்
கண்டழைத்து வந்திடுமோ?

ஏதுக்கும் மாடுவந்தால்
 எல்லாம் விளங்கும்" — எனத்
தீதுக்கும் நன்றுக்கும்
 எண்ணம் திரிந்தலைய
வல்லரிமா தன்புழைக்கு
 வால்பற்றிப் பின்சென்று,
கல்லொன் றணையாகக்
 கால்மடக்கி ஓய்ந்ததுவே! 1470

வெங்கதிரும் மேற்கில்போய்
 வீழப்போ கும்மாலை!
எங்கும் இருள்வெள்ளம்
 ஏறிவரும் நன்னேரம்!
அந்நேரந் தன்னில்
 அரிமா துயில்களைந்து
குன்றோரம் வந்தாங்கோர்
 குத்துக்கல் மீதமர்ந்து,
காடே நடுநடுங்கக்
 காது படபடக்க 1475
ஏடுவிளக் காத
 இடிமுழக்கம் செய்ததுவே!

பெண்கழுதை நெஞ்சைப்
 பிளந்ததுபோல் அஞ்சியதால்
மண்தரையில் வந்ததன்முன்
 மண்டியிட்டுக் கொண்டதுவாம்!

அக்கால் களிறிரண்டும்
 ஆங்குவந்து நின்றனவே!

முக்கால் முகந்திருப்பி
  முன்னின்ற காட்சியினைக் 1480
கண்ட கழுதைக்குக்
  கண்ணிரண்டும் மங்கியது!

மண்டை கனத்ததுவாய்
  மாயமனம் பொங்கியதாய்
'ஓ'வென்ற பேரிரைச்சல்
  காதில் ஒலிப்பதுவாய்
'ஆ'வென்று கூச்சலிட்டே,
  "அம்மா, மகளே, நீ
வந்தாயா? எங்கிருந்தாய்?
  வாழாத போக்கிலிநான்! 1485

நொந்தாயா? உன்னை
  நொடியில் இழந்தேனே!
எங்குநீ போயிருந்தாய்?
  என்னஇடர் பட்டாயோ?
எங்குத் துயின்றாயோ?
  எப்படித்தான் வாழ்ந்தாயோ?
ஐயகோ, உன்னை
  அணுஅணுவாய்க் கொன்றேனே!
உய்யாத முண்டம்நான்!
  உன்னைவிட்டுப் போனேனே! 1490

வா, மகளே! வா" — என்றே
  வாய்படக்கக் கூறிய, தாய்
'ஓ'வென் றழத்தொடங்கி,
  ஓடிவந்து, வெங்களிற்றின்

மேலிருந்த குட்டியினை
 மேலணைக்கத் தாவியது!

காலெழுந்து தாவிக்
 கழுதையின்பால் குட்டிவந்து
நின்றதுவும் பெண்கழுதை
 நீள்முகத்தால் மேனியெல்லாம் 1495
தின்பதுபோல் மோந்து, மனந்
 தீராத தாயன்பால்
குட்டிமுகத் தோடேதன்
 கூம்புமுகந் தேய்த்தபடி
ஒட்டிவைத்துக் கொண்டே
 உலகை மறந்ததுவாம்!

ஆன்ற சிலநொடியவ்
 வாறிருந்த பெண்கழுதை
ஊன்றும் நினைவால், முன்
 உள்ளவற்றைப் பார்த்ததுவே! 1500
பார்த்ததுவும், மேனி
 படபடக்க, உள்ளுணர்வால்
ஆர்த்தெழுந்தே, "அண்ணா ஓ"
 என்றே அகஞ்சிலிர்க்கக்
கத்தியவா றோடிப்போய்க்
 காளைமுகத் தோடுமுகம்
ஒத்தியவா றுண்மை
 உடன்பிறப்புப் போல்மகிழ்ந்து,

"நீங்கள் இருவருமே
 என்ன நினைந்தீரோ? 1505

ஆங்கவ்வா றின்றி
அலைந்தீரோ? நான்மட்டும்
உங்கள் இருவரையும்
ஒவ்வோர் இமைப்பொழுதும்
இங்கிருப்ப தாகவே
எண்ணி உயிர் வாழ்ந்தேன்"

— என்று, கழுதையம்மை
ஆங்கே எதிரிருந்த
குன்றம், விலங்கரசன்
கொல்களிறு கள்—இரண்டு, 1510
மற்றிருண்ட காடு—என்னும்
எல்லாம் மறந்தபடி
உற்ற உரைகுழற
உள்ளம் உவந்ததையும்,

வெள்ளத் துணர்ச்சியிலே
வீழ்ந்து குளித்ததையும்
விள்ளரிய நன்மனத்தால்
வேந்தரிமா பார்த்திருந்து,
நெஞ்சம் குளிர்ந்தபின்னை,
நின்று களிறுகட்குக் 1515
கொஞ்சம் கழுத்தசைத்துப்
போய்வரவும் கூறிவிட்டு,

"நல்லமைச்ச! மற்றவெல்லாம்
நாளைக்குப் பார்ப்ப"மெனச்
சொல்லியவா றாங்கெழுந்து
காட்டையிராச் சுற்றிவரப்

போனவுடன், பெண்கழுதை
  பொங்குணர்வால் காளையிடம்
ஆனகதை முற்றுமாய்
  ஆவலொடு கேட்டதுவாம்! 1520

பெண்கழுதை கேட்டிடவும்
  காளை, பிரிவுமுதல்
கண்பட்ட நேரம்வரை—
  காட்டில் திரிந்ததையும்,
வேங்கைமுன் தாழ்ந்து,
  வரிப்புலியால் வீணலைந்து,
மூங்கிலடர் காட்டுள்
  உடலெல்லாம் முள்பட்டுக்

காட்டாற்று நீரில்
  கழுத்தளவு நீந்திவந்து, 1525
கோட்டானைக் கண்டதையும்,
  கொல்கரடிக் கூட்டத்தில்
சிக்கித் தவித்துச்
  சிறுத்தைக்குக் கண்தப்பித்
திக்கித் திணறித்
  திகைத்தலைந்து நொந்ததையும்,

அப்பால் மனந்தேறி,
  என்னநிலை ஆனாலும்
எப்போதும் போல்நாட்டுக்
  கேகிவிடும் எண்ணமுடன், 1530

போகவழி கண்டலைந்தே,
　　ஒன்றும் புலனின்றிச்
சாகும் நினைவுடனே
　　உள்ளச் சலிப்போடு,
போகவழி கண்டலைந்தே,
　　ஒன்றும் புலனின்றிச்
சாகும் நினைவுடனே
　　உள்ளச் சலிப்போடு,

குந்திக் கிடந்ததையும்,
　　குட்டியினைக் கண்டதையும்,
உந்தும் மனத்துணிவால்
　　ஊடாடும் வேளையிலே
குள்ளநரி கண்டு
　　குறும்புரைத்த தெல்லாமும், 1535
உள்ளம் சிலிர்க்க
　　உரைத்து மகிழ்ந்ததுவாம்!



# இயல் : 24

கல்லாத மூடர்;
கயவர்! பெருங்களியர்—
எல்லாரும் நாம்உண்ணற்
கேற்ற விலங்குகளாம்!

அன்றிரவும் போக
அடுத்தநாள் காலையிலே
குன்றடியில் எல்லா
விலங்குகளும் கூடிநின்று,

காட்டரசன் வல்லரிமா
　　கூறும் கருத்துகளைக்
கேட்டனவாம்! அக்கால்
　　அரிமா கிளந்ததிது: 1540

"அன்பு விலங்குகளே!
　　இன்றோ டனைவரும்நாம்
இன்பமுடன் வாழ்வோம்;
　　எவருக்குந் துன்பிழையோம்;
நம்மில் தவறிழைக்கும்
　　பொல்லாரை நாம்உண்போம்;
நம்முடைய காடு
　　நமக்குப் பொதுவாகும்!

காட்டின் நலன்களெல்லாம்
　　காப்பதுவே நம்கடமை! 1545
ஈட்டுகின்ற ஈட்டத்துள்
　　எல்லார்க்கும் பங்குண்டாம்!
எல்லாரும் நாமுழைப்போம்!
　　எல்லாரும் நாம்உண்போம்!
பொல்லாப் பசிநோயை
　　எல்லாரும் போக்கடிப்போம்!

நம்மில்எல் லாருமே
　　நல்லவராய் வாழ்வமெனில்,
நம்மில் சிலர்போய்
　　நகரத்தில் வாழ்கின்ற 1550

மக்களெனும் நாகரிக
மாக்களிலே சிற்சிலரைத்
தக்கபடி கொண்டுவந்து —
தான். தின்னல் வேண்டும்.இனி!

நம்மவரில் நல்லவரை
நாமுண்ணல் கூடாது!
இம்மா நிலந்தனிலே
எத்தனையோ மாந்தருளர்!
ஆங்கவர்கள் தம்முள்
அனைவருமே மக்களிலர்! 1555
ஈங்குள்ள நம்மைவிட
எத்தனையோ தாழ்வுஅவர்க்குள்!

பொல்லா அறக்கொடியோர்;
பொய்புனைந்து வாழ்ந்திடுவோர்!
இல்லாத ஏழையரை—
எத்திப் பிழைத்திடுவோர்;
கன்னியரைக் கற்பழிப்போர்;
கையூட்டு வாங்கிடுவோர்;
துன்னக் கொலைவிளைப்போர்;
போலித் துறவியர்கள்; 1560

கல்லாத மூடர்;
கயவர்! பெருங்களியர்—
எல்லாரும் நாம்உண்ணற்
கேற்ற விலங்குகளாம்!

அத்தகையோ ரைத்தான்
　　அருந்தல்வேண் டும்,இனி,நாம்
செத்தொழியும் நம்மையும்
　　சிற்சிலபேர் உண்ணலாம்!

எப்படியும் நாமினிமேல்
　　எவ்வுயிர்க்கும் மேலுயிரே! 1565
ஒப்பினிரா?" என்றரிமா
　　ஓங்கிக் குரல்கொடுக்க,
"ஒப்பினோம்; ஒப்பினோம்"
　　என்றே ஒருகுரலில்
செப்பினவே மாக்களெல்லாம்,
　　வானம் சிலிர்த்திடவே!



# இயல் : 25

ஈங்கவர்கள் தம்மைவிட
எல்லா நிலைகளிலும்
ஓங்கி உயர்ந்தவர்நாம்
என்றுணர்த்த வேண்டுகின்றேன்!

வல்லரிமா கூறியதை
வாயடங்கிக் கேட்டிருந்த
புல்லுண்ணும் ஊனுண்ணும்
போக்குடைய யாவையுமே 1570

தீதாம் உலகைவிட்டுத்
  தீமையொன்றும் காணாத
ஏதாமோர் புத்துலகிற்
  கின்பமொடு போவதுபோல்,

எண்ணி மகிழ்ந்திருக்கும்
  வேளையிலே, இன்கழுதை
வெண்ணிறத்து மூக்கை
  விரித்தபடி முன்வந்து,

கீழ்வருமா றாங்குரைக்கும்!
  'கீழ்மை உயிர்களெனத் 1575
தாழ்வாக நம்மினத்தை
  மக்கள் தரம்பிரிப்பார்!

ஆயினுமே அன்னவரும்
  நம்முயிராய் ஆகித்தான்
வாய்விளங்கி, மூளையினுள்
  வாய்த்த திறம்விளங்கி,

மாந்த உயிர்களென
  வாழுநிலை பெற்றார்கள்!
ஏந்துகின்ற நாகரிகம்
  எல்லாமும் பின்தானே! 1580

இந்தப் படிபார்த்தால்
  எம்குலத்தார் அன்னவர்க்கு
முந்தையிலே தோன்றிவிட்ட
  மூத்தநறுந் தாய்க்குலமே!

பெற்றோர்கள் கல்லாத
பெற்றியினால் தாழ்வாரோ?
மற்(று)அவர்கள் என்னதாம்
மாந்தநிலை எய்திவிட்டார்?

நம்மைவிடக் கீழான
தீக்குணங்கள் நாட்டுகின்றார்! 1585
மும்மைப் பொழுதுமே
மூள்கின்ற சண்டைகள்தாம்!

புன்மைப் புழுக்கம்,
பொறாமைப் பெரும்புகைச்சல்,
நன்மையொன்றும் நாடாத
தந்நலமே நாடுகின்றார்!

ஆனால்நாம் அன்னவர்போல்
ஆகிவிடக் கூடாது
மேன்மேலும் நாமுயர்ந்து,
மேலென்று காட்டுவதே 1590

மாந்தருக்கு நாம்கொளுத்தும்
மானமுள்ள நல்லறிவாம்!
ஏந்துகளும் நாகரிக
எத்துகளும் மேலாமோ?

ஈங்கவர்கள் தம்மைவிட
எல்லா நிலைகளிலும்
ஓங்கி உயர்ந்தவர்நாம்
என்றுணர்த்த வேண்டுகின்றேன்!

இந்நாள் வரைக்கும்நான்
எத்தனையோ துன்பத்தால் 1595
புண்ணாகிப் போய்விட்டேன்;
போதுமினி வாழ்வெனக்கு!

மேலும் நெடுநாள்கள்
வாழ விரும்பவில்லை!
ஏலாத வாழ்வெதற்காம்?
என்னைமுதற்காவாக —

உங்கட்கே நல்லுணவாய் —
உள்ள மகிழ்ச்சியுடன்
இங்கென் உடல்தசையை
ஈகின்றேன்; உண்ணுங்கள்! 1600

எத்தயக்க மும்இன்றி
ஏற்றுக்கொள் ளுங்களெனை!
ஒத்துக்கொள் ளாவிடிலோ
உண்ணாமல் நான்சாவேன்!"

என்றே இயம்பியதும்,
எல்லா விலங்குகளும்
ஒன்றும் விளங்காமல்
'ஓ'வென் றழுதனவே!



# இயல் : 26

உள்ளம் இடிந்தும்
உயிர்துடித்தும் கண்ணீரின்
வெள்ளம் பெருக்கி
வெலவெலத்து நின்றனவே!

தன்னைமுதற காவாகத
தங்கள் பசிக்களிக்க 1605
அன்னைக் கழுதை
அகமகிழ்ந்து கூறியதை

ஏற்றுக்கொள் ளாமல்,
 இருந்த விலங்கெல்லாம்
கூற்றின் இடியொன்று
 குத்தென்று வீழ்ந்ததுபோல்

துன்பம் புடைத்தொன்றும்
 தோன்றா நினைவுடனே
வன்கற்க ளாய்ச்சமைந்து
 வாயெழவும் மாட்டாமல், 1610
நின்றிருக்கும் போழ்தில்,
 நெடும்பிடரி வல்லரிமா,

'கொன்றதுபோல் நீ,பேசி
 விட்டாய், கழுதையம்மா!

இங்குகேள்: நீயேன்
 இறந்திடுதல் வேண்டும்? நின்
பொங்குதுயர் எல்லாமும்
 போயொழிந்த பின்னை,நீ
ஏனிறக்க வேண்டும்? உன்
 ஈடில்லா நல்லறிவால் 1615
தான்சிறக்க வேண்டும்,இத்
 தண்காடும் வாழ்விலங்கும்!

நீயிருந்து நல்லமைச்சாய்
 நீளப் பொறுப்பேற்று
வாயிருந்து பேசுகின்ற
 மக்கள் வியப்படைய

நல்ல திருத்தங்கள்
 நம்விலங்குக் கூட்டத்தில்
சொல்லிச் செயல்நிறுத்திச்
 சோராப் புகழ்பெற்று 1620
வாழ்ந்திருக்க வேண்டுகின்றேன்!
 வந்து பொறுப்பேற்பாய்!
சூழ்ந்திருக்கும் இவ்விலங்குக்
 கூட்டம்உன் சொல்கேட்கும்!

வாழ்க, கழுதையம்மை!
 வாழ்க, முதலமைச்சர்!
வாழ்க,வாழ்' கென்றரிமா
 வாழ்த்திடவும், ஆங்கிருந்த

நல்விலங்குக் கூட்டமெல்லாம்
 காடே நடுநடுங்க 1625
'வல்ல முதலமைச்சர்,
 வாழ்க !வாழ் கென்றே

முழங்கி யடங்கினவே!
 முத்துமுத்தாய்க் கண்ணீர்
வழங்குகின்ற கண்களொடும்
 வாழ்த்துகின்ற நெஞ்சோடும்,
தாய்க்கழுதை ஓடிவந்து,
 தாள்மடக்கி மண்டியிட்டே
வாய்க்குள்நா வும்,துடிக்க
 வல்லரிமா முன்வணங்கி, 1630

வல்லரிமா வாழ்க'வென
வன்குரலில் வாழ்த்தியபின்,
மெல்லெழுந்து நின்றேதன்
மேனி சிலிர்த்ததுவாய்

ஆங்கிருந்த மாக்கள்முன்
'அன்பர்காள்! நம்மரசர்
நீங்கவிலா அன்பாலென்
நீள்வருத்தம் போக்கிவிட்டார்!

போக்கியது மன்றிப்
புதுப்பொறுப்பை யும்,தந்தே 1635
ஊக்கியும்விட் டார், என்னை!
உங்கட் குழைத்திடவும்
கட்டளையும் தந்துயர்ந்தார்!
காலமெல்லாம் நன்றிசொல்வேன்!

பெட்டைக் கழுதைக்குப்
பேரமைச்சு தந்தவர்க்கு
நல்கடமை யாற்றுதலே
நான்செய்யத் தக்கதுவாம்!

வெல்கநம் காட்டின்
விலங்குகளின் நல்லரசு! 1640
இன்றுமுதல் ஆட்சி
இனிதே தொடங்கட்டும்!
ஒன்றுசெய்ய வேண்டும்,நான்!
உங்களிலே சிற்சிலர்க்கு

நல்ல பொறுப்புகளை
நான்வழங்கப் போகின்றேன்!
எல்லாரும் ஒத்துழைத்தே
ஏற்றமுறச் செய்யுங்கள்!

எல்லாரு மே,பதவி
ஏற்க இயலாது! 1645
வல்லார் ஒருசிலர்க்கே
வாய்ப்பை வழங்குகின்றேன்!
நானழைக்கும் வல்லோர்கள்
நம்முன்னர் வந்துநிற்க!
ஏனிவர்க்குத் தந்தேனென்
றெண்ணாதீர்' என்றுரைத்தே,

'காளை எனக்குமெய்
காப்பாள ராய்அமைக!
வாளை உகிராக
வைத்த வரிப்புலியும் 1650
தானைத் தளபதியாய்த்
தாங்கிப் பொறுப்பேற்க!
யானைகள் காவலர்கள்!
யாவையுமே ஆராயும்
குள்ளநரி ஒற்றர்!
கொடுங்கழுத்து நீள்சிவிங்கி,
கள்ளமதி ஒற்றர்க்குக்
காலும் துணையொற்றர்!

ஊளைசெய் ஓநாய்கள்
உண்மையிராக் காவலர்கள்! 1655

தோள்மதர்ப்புக் காட்டெருமை,
    தோற்றப் புலிக்கழுதை,

வல்கரடி யாவும்
    வருகஅதி காரிகளாய்!
நல்வாய்க் குயிலனங்கள்
    நல்லரசுப் பாடகர்கள்!

ஆடல் மயில்கள்
    அரசவைஆ டற்கலைஞர்!
கேடில்லா மானினங்கள்
    கேட்குமிய வக்கலைஞர்! 1660

— இன்னபடி யாயிங்
    கிருப்பவர்கள் எல்லாரும்
சொன்னபடி தாம்நடந்தால்
    சொல்லும் அரசமைப்பு
நல்லபடி யாய்நடக்கும்!
    நண்பர்காள் ஒத்துழைப்பீர்!
வெல்லட்டும் நம்மின்
    விலங்கரசு! ஒப்புவிரா?'—

என்றே கழுதை
    இயம்பிடவும், ஆங்கிருந்த 1665
நன்றாம் விலங்கினங்கள்
    'நன்றெ'ன்றே ஒப்பினவே!
இப்படியாய் வல்லரிமா
    ஆட்சி இருந்துவர,

செப்பமுறப் பெண்கழுதை
  சீர்திருத்த நோக்குடனே
சட்டங்கள் செய்து,
  சமன்மை அமைத்தொழுகித்
திட்டங்கள் தீட்டித்
  திகழ்ந்ததொரு நல்லரசை 1670
ஏற்படுத்தித் தந்தே
  இரண்டாண்டு கள்ஆண்டு
மேற்படவும் ஆளா
  மிகமுதுமை வாய்ந்ததனால்,
தன்குமரிப் பெண்கழுதை
  தன்னிடத்துத் தன்பொறுப்பை
நல்கிவிட்டுத் தானோர்நன்
  னாளில் தனியிருந்தே
உண்ணாநோன் புற்றே
  உயிரைத் துறந்திடவும், 1675
விண்ணே இடிந்ததுபோல்
  காட்டு விலங்கெல்லாம்

உள்ளம் இடிந்தும்
  உயிர்துடித்தும் கண்ணீரின்
வெள்ளம் பெருக்கி
  வெலவெலத்து நின்றனவே!



*பாவலரேறு பெருஞ்சித்திரனார்*

# இயல் : 27

"அத்தகைய வாழ்க்கைக்(கு)
அடர்காடு நன்றாகும்!
துத்துத்தூ நாட்டைத்
துறந்து,கா டேகுங்கள்!"—

நட்புக் கிலக்கணமாய்
நாட்டாண்மைக் கோர்வடிவாய்ப்
பெட்புறவே வாழ்ந்திருந்த
பெண்கழுதை மாய்ந்திடவும், 1680

காளை பெருந்துயரால்
கண்ணீர் வடித்தபடி,
தோளையொத்த தோழமையின்
தொல்பெருமைப் பண்பையெலாம்
ஆங்கிருந்த கான்விலங்குக்
கூட்டத் தழுதுரைத்தே,

"ஈங்கினிமேல் வாழ்தற்
கியலாது தோழமையீர்!
தாங்கரிதாம் இத்துன்பம்!
தாளேன்நான் என்றுரைத்துப் 1685
பாங்கில் அமைந்திருந்த
பாழுங் கிணறொன்றில்
தானும் விழுந்திறக்கத்
தாவி யெழுந்திடவும்,

"ஏனோநீர் என்னை
மறந்தே இறப்பதுவாய்ப்
பொல்லா நினைவுகொண்டீர்?
போவதினி நானுமெங்கே?
நல்லா தரவாக
நீரிருந்தால் நானிருப்பேன்; 1690
இல்லா விடிலோ
இதோநானும் வீழ்ந்திறப்பேன்;
எல்லாமும் போயினபின்
ஏதெனக்கு வாழ்க்கையிங்கே?"

– என்றுரைத்துக் குட்டி
இளவமைச்சுப் பெண்கழுதை

நின்றழவும், காளைமுன்
நீட்டியகால் பின்வாங்கி,
ஐயகோ அம்மா!
அருமை இளஅமைச்சே! 1695
வெய்ய கொடுந்துயரை
எங்ஙன் விளக்கிடுவேன்?

உன்னை மறந்தே
உயிர்விடவும் போனேனே!
என்னைப் பொறுத்திடம்மா?
என்னுயிரின் மேலாக,
உன்னைநான் காத்திடுவேன்!
ஓம்பிஉயிர் வாழவைப்பேன்!
அன்னைக்கும் அன்னையென
அன்புசெய்து போற்றிடுவேன்!" 1700

என்றுரைத்துக் காளை
இளமைக் கழுதையின்பால்
சென்றமைவு கூறிடவும்,
ஆங்குச் சிலிர்த்துநின்ற
நல்விலங்குக் கூட்டமெல்லாம்
நல்லரிமா சொன்னபடி—
பல்வகையாய்ப் பெண்கழுதைப்
பாரி உடம்பினையே
நீராட்டிப் பூக்களிட்டு
நீள நினைந்திரங்கிப் 1705
பாராட்டி ஒவ்வொன்றாய்ப்
பக்கவந்து தாள்வணங்கி.

விண்தொட்ட நீள்மரங்கள்
வீழ்த்தும் நிழற்பரப்பில்
மண்தொட்டு நல்லடக்கம்
செய்து மனந்தேறித்
தந்தம் இருப்பிடங்கள்
தாம்சேர்ந்த அந்நாள்போய்,
ஐந்தாறு நாள்சென்றே,
அனைத்து விலங்குகளும், 1710
முன்னாள் அமைச்சர்
கழுதைமூ தாட்டிக்கு
அந்நாள் புதைத்திட்ட
ஆன்ற அழகிடத்தில்,
பொன்னால் சிலைசெய்து,
போற்றுகின்ற நன்னாளில்,

மன்னன் விலங்கரசன்
மற்றிருந்த மாக்களின்முன்
வல்ல இடிக்குரலில்
வன்தலைமைப் பேருரையை 1715
நல்ல தமிழில்
நயம்படவே கூறியதாம்!



*பாவலரேறு பெருஞ்சித்திரனார்*

# இயல் : 28

சூழும் நலன்களிலே
சொத்துரிமைக் கும்மேலாய்
உள்ள தெது ?வாழ்க்கை
உரிமை யன்றோ ?

"அன்புள்ள தோழமையீர் !
ஆன்ற பெருங்காட்டின்
இன்பக் குடிமக்காள் !
எல்லாரும் கேளுங்கள் !

ஈண்டெமக்கு நல்லமைச்சாய்
　　இருந்த கழுதையம்மை
பூண்ட தகுதிக்கும்!
　　பொய்யில்லாத் தொண்டினுக்கும் 1720
நன்றிநாம் சொல்வதென்றால்
　　நாமணக்கும்! சொல்மணக்கும்!
என்றைக்கிவ் வாறொருவர்
　　எம்மிடையில் தோன்றிடுவார்?—
என்னும் படியாய்
　　இருந்தமைச்சு செய்திருந்தார்"

மன்னன்நான் பேருக்கே!
　　மற்ற படிஅவரே
எல்லாம் திருத்தமுற
　　எம்மரசை ஆண்டவராம்! 1725
வல்லதவர் ஆட்சி
　　வறுமையில்லை; கீழ்மையில்லை!

இப்படியோர் நல்லமைச்சர்
　　ஏற்றமிகு மாந்தருக்கே
தப்பித் தவறிவந்து
　　வாய்த்துவிட்டால் தாமவர்க்குள்
குத்து, கொலை ஏது?பெருங்
　　குற்றங்கள் தாம்ஏது?

எத்து,புரட்(டு), ஏமாற்றும்
　　எங்கிருக்கும்? இன்னுமவர் 1730
கீழ்மைக்கும் கீழ்மையதாய்க்
　　கேடுகட்டும் கேடாகும்

பாழ்மைசேர் சாதிப்
 பகுப்புகள்தாம் எங்கிருக்கும்?

அப்படியோர் நல்லமைச்ச
 ராகக் கழுதையம்மை,
ஒப்பி உயர்பிறவி
 உற்றஅந்த மக்களிடை
சென்று பிறந்துபல
 சீர்திருத்தங் கள்இயற்றி 1735
நன்றாக ஆட்சிசெய்து
 நல்விளைவை நாட்டுகென்றே
நாம்வேண்டிக் கொண்டிடுவோம்!
 நாமும் கழுதையம்மை
தாம்விரும்பி வாழ்ந்தபடி
 தக்கவராய் வாழ்ந்திடுவோம்"

– என்றரிமா கூறி
 இடத்தில் அமர்ந்தவுடன்,
நின்று, குும ரிக்கழுதை —
 நீள உரைபொழியும்! 1740

"வல்ல விலங்கரசே!
 வாழும் விலங்கினங்காள்!
நல்லமைச்ச ராய்என்தாய்
 வீற்றிருந்த நல்லிடத்தில்—
பொன்வைத்த முன்நினைவில்
 பூவைத்த வாறாக—
என்னை அமைச்சரென
 ஏற்றுள்ளார் நம்மரசர்!

ஏற்றுக்கும் பற்றா
இளஞ்சிறுமி யோள்.நானும் 1745

வெற்றுப் பெருமைக்கு—
வீணுக்(கு) அமைச்சரென—
மன்னவரின் எண்ணம்
மறுக்காமல் ஏற்றுள்ளேன்!
அன்னையவள் சீர்த்திக்கே
ஆர்ஈடு தந்திடுவார்?

மக்களிடை வாழ்ந்து
மனந்தெளிந்து மாண்புற்றுத்
தக்க அறிவுபெற்றுத்
தாம்ஓர் விலங்கென்றும், 1750
அவ்விலங்குக் கூட்டத்தும்
ஆரும் மதிக்காத —
தவ்வைக் கழுதையென்றும்—
தாழ்ந்த பிறவியென்றும்—

ஒக்க உணர்ந்திருந்தும்,
உள்ளந் தளராமல்,
மக்களென வாழ்ந்திருக்கும்
மாண்பவிந்த கூட்டத்தை
விட்டு வெளியேறி
வீறும் உணர்வோடு, 1755
'கெட்டாலும் குட்டிச்
சுவர்தான் கழுதைக்'கென்

றுள்ள பழமொழிமேல்
ஓங்கி அடித்துவிட்டுப்
பள்ளமென்றும் மேடென்றும்
பாராமல் பற்பலநாள்,
நல்லுரிமை நாடி
நடந்தலைந்து, காடுவந்தே
வல்லரசன் போற்றுகிற
வன்மை அமைச்சரென 1760
நற்பதவி யேற்று
நயன்மை திறம்பாமல்
பொற்புறவே நல்ல
பொதுமை சிறக்கின்ற
திட்டங்கள் தீட்டித்
திருத்தம் பலசெய்து,
விட்ட(து) உயிரையென்றால்
வீணென்று யார்சொல்வார் ?

என்றன்தாய் பட்ட
இடும்பை தொடர்துயரை 1765
என்றுமே யாரும்
எதிர்ப்பட் டிரார்என்பேன் !

தோன்றும் உயிரெல்லாம்
துன்பம் பலபடலாம்;
ஆன்றதுயர் அத்தனையும்
ஆய்ந்தறிந்தால் கொள்கைக்குப்
பட்டதுயர் போல்பெருமைப்
பட்டதுயர் இல்எனலாம் !

திட்டமிட்டோர் கொள்கையினைத்
　　தேர்ந்துகொண்டோர் ஈங்கதனை 1770
ஒக்கச் செயற்படுத்த
　　ஒரா யிரந்துயரில்
மிக்க மிதந்தாலும்
　　மேன்மையதற் குண்டெனலாம்!

என்தாய்க் கழுதையம்மை
　　ஏன்பட்டார் வெந்துயரம்?
தன்றன் நலத்துக்கா
　　தாம்துயரம் பட்டார்கள்?
காதலிலே மூழ்கிக்
　　கடுந்துயரம் கொண்டாரா? 1775
மோதலிலே தம்பகையால்
　　மூண்டதுயர் பட்டாரா?

மக்களெனும் மேம்பட்ட
　　மாந்தப் பிறவியிடம்
தக்கவொரு முன்னேற்றம்
　　தாம்காணாப் போதினிலே
அன்னவொரு கூட்டத்தை
　　ஆழ வெறுத்தொதுக்கித்
தன்னோர் உரிமைக்குத்
　　தாம்துணிந்து பாடுபட்டார்! 1780

"வாழப் பிறந்துவிட்ட
　　வல்லுயிர்கள் அத்தனைக்கும்
சூழும் நலன்களிலே
　　சொத்துரிமைக் கும்மேலாய்

உள்ளதெது ? வாழ்க்கை
    உரிமையன்றோ? அவ்வுரிமை
தள்ளப் படும்பொழுதில்
    தான்வாழ்தல் கீழ்மையன்றோ?

இல்லாரை உள்ளவர்கள்
    ஏய்த்துப் பிழைப்பதுவும், 1785
நல்லாரை ஏழையென்றால்
    நாயென் றிழிப்பதுவும்
ஒருருவும் ஒருணர்வும்
    ஒரினமு மாயுள்ள
பேருருவ மாந்தருக்குள்
    பீழைப் பிறப்பென்று,
தாழ்வுயர்வு கற்பித்துத்
    தாழ்ச்சியுற்றுப் போவதுவும்,

வாழ்வுரிமை யற்றவ்
    வறிய பிறவிகளும், 1790
வாயுரிமை தானுமிலா
    வாழும் புழுக்களைப்போல்—
ஈயெறும்பு வாழ்வதுபோல்—
    எச்சில் பிறவிகளாய் —
உள்ளார்கள் என்னில் —
    உரிமையதற் கில்லையெனில் —

கொள்ளாதவ் வாழ்வையொரு
    கூனற் கழுதையுமே —
அத்தகைய வாழ்க்கைக்(கு)
    அடர்காடு நன்றாகும்! 1795

துத்துத்தூ நாட்டைத்
துறந்து,கா டேகுங்கள்"—

என்னும்ஓர் உண்மையினை —
எண்ணத்தால், தாம் விளைத்துத்
தின்னுவதால் 'மாந்தர்' — எனும்
தீய விலங்குகட்கு
நன்றாய் உணர்த்திடத்தான்
நாடுவிட்டுக் காடேகி,
என்தாய்க் கழுதையம்மை
எத்தனையோ வல்லிடரைத் **1800**
தாங்கி விலங்கமைச்சாய்த்
தாமுயர்ந்து, தம்கொள்கைப்
போங்கை நிலைநாட்டிப்
புத்துணர்வு கொண்டோர்
பொதுமை அரசாட்சி
பூத்திடவும் வாழ்ந்து
புதுமை விளைத்துயிரைப்
போக்கிடவே ஈகஞ்செய்(து)
இங்கே நமக்கெடுத்துக்
காட்டாய், இதோ,சிலையாய் 1805
மங்காப் புகழ்பெற்று
மாய்ந்தும் மா யாதவராய்
நின்றுள்ளார்! என்றும்
நிலைக்கும் அவர்கொள்கை!
என்றும் அவர்வாழ்க!
எங்கும் புகழ்பெறுக!"

—என்றே கழுதைத்தாய்
    ஈன்றுதந்த குட்டியெனும்
வென்றி இளஅமைச்சர்
    வீங்குகின்ற துன்புணர்வால், 1810
திக்கித் தவித்துத்
    திசைந்து மனம்நெகிழ்ந்து
விக்கிவிக்கி யாரும்
    விளக்கவிய லாப்பொருளில்
நீண்ட ஒலியெழுப்பி
    நீணிலமும் வானகமும்
பூண்ட உயிர்க்குலமும்
    பொங்கி அதிர்வுறவும்
உள்ளம் கரைந்துருக
    ஊனும் உருகிடவே 1815
வெள்ளமாய்க் கண்ணீரும்
    வீழ விசித்தழுமே!



# இயல் : 29

என்னின் இருவிழிகள்
ஈரம் கசிந்தனவால்!

அந்த அழுகையொலி
ஆழ்ந்துறக்கம் கொண்டஎன்னை
உந்தி எழுப்பிடவும்
உள்ளம் விழிப்புணர
சற்றே எழுந்தமர்ந்து
சாய்ங்காலம் என்றுணர்ந்து,

சுற்றுமுற்றும் பார்த்திருந்தேன்!
　　சூழல் விளங்கியது! 1820

காலையிலே பொங்கலுண்டு
　　காற்றாட வந்ததுவும்
சோலைப் புதைகாட்டில்
　　சோர்வுறவே ஒய்ந்ததுவும்,
ஆற்றங் கரைக்காற்றில்
　　அப்படியே கண்மயங்க
வீற்றயர்ந்த போதில்,
　　வெளுப்பார் அவிழ்த்துவிட்ட
தாய்க்கழுதை ஒன்றும்
　　தனிக்குட்டி ஒன்றுமாய் 1825
வாயவிழ்த்துக் கத்தியதும்
　　வன்புலம்பல் கூறியதும்,

மெல்லமெல்லக் கண்மூட
　　மேலேஅத் தாய்க்கழுதை
சொல்லி யழுதிருந்த
　　சொற்கள் விளங்கியதும்,
ஆழ்ந்த உறக்கத்தே
　　அக்கழுதை கள்,கனவில்
வாழ்ந்த வகையெல்லாம்
　　வந்துற்ற கற்பனையும் 1830
ஒவ்வொன்றாய் எண்ணி
　　உணர்ந்தேன்; உணர்ந்தவுடன்
சிவ்வென் றெழுந்தேன்!
　　சிலிர்த்தெழுந்த உள்ளுணர்வால்

ஆங்கிருந்த குட்டிச்
 சுவரின் அருகோடி
ஈங்கென்றன் நீள்கனவில்
 ஏற்றம் நிகழ்த்திவிட்ட
மேன்மைப் பிறவிகளை
 மேலிட்ட ஆர்வமொடு 1835
கூன்விழியால் தேடினேன்!
 கும்பிடவும் நான்நினைத்தேன்!

நான்நினைத்த எண்ணம்
 நசிந்துவிடும் என்றறியேன்!
ஊனுருவில் புன்கழுதை
 ஓவியமாய் நின்றாலும்,
உள்ளத் துயர்ந்துவிட்ட
 ஒண்பிறவிப் பேறுகளைப்
பள்ளத்தும் மேட்டினிலும்
 பார்த்தேன்; கிடைக்கவில்லை! 1840

ஆனாலும் அந்த
 அருமைப் பிறவிகளைக்
காணாமல் வீடேகக்
 கால்கள் துணியவில்லை!
அப்படியே சோர்வுற்(று)
 அலைந்து வருகையிலே
எப்படிநான் சொல்லுவேன்!
 எவ்வாறு விண்டுரைப்பேன்!

ஐயகோ, அந்த
 அருமைக் கழுதைகளும் 1845

*பாவலரேறு பெருஞ்சித்திரனார்*

பைய புதரொன்றின்
    பக்கலிலே, ஒன்றையொன்று
பின்னிப் பிணைந்து
    பிணமாய்க் கிடந்தனவே!
என்னின் இருவிழிகள்
    ஈரம் கசிந்தனவால்!



# இயல் : 30

வாழுங் கொடியவர்முன்
வாழ முடியாமல்
வீழும் விழுமியரை
வெவ்வுலகம் காப்பதெந்நாள்?

**"என்றன் கனவுலகில்**
**ஏற்றதொரு கொள்கையுடன்**
**நின்றியங்கி நல்லாட்சி**
**நேர்மையினைக் காட்டியவா** **1850**

றெல்லாத் தனிச்சிறப்பும்
எய்திவிட்ட சீர்த்தியுடன்
பொல்லா உலகைவிட்டுப்
போய்விட் டன,போலும்!

சீரிய கொள்கை
சிறந்து விளங்குபவர்
நேரிய வாழ்க்கை
நிகழ்த்த வியலாமல்
பொய்யும் புரட்டும்
புனைவுமிக மின்னுகின்ற 1855
வெய்ய கொடுமுலகில்
வாழ விருப்பமின்றி
ஒற்றையராய் நின்றே
உயிரைத் துறப்பதைப்போல்
வெற்றிக் கழுதைகளும்
வீரச்சா வெய்தினவோ?

வாழுங் கொடியவர்முன்
வாழ முடியாமல்
வீழும் விழுமியரை
வெவ்வுலகம் காப்பதெந்நாள்?" 1860
என்றே பலநினைந்தே
ஏற்றமுற்ற ஈருயிரை
நன்றே வணங்கிநின்றேன்,
நான்!

(முற்றும்)

## அருஞ் சொற்பொருள்

அடலேறு — வலிமை வாய்ந்த ஆண் அரிமா
அரவம் — ஒலி
அரிமா — மடங்கல் (சிங்கம்)
அனல் — சூடு
ஆண்டை — முதலாளி
ஆர்த்த — முழங்கிய
ஆலோலம் — ஒருவகைப் பாட்டு
ஆவி — உயிர்
ஆவிகால — உயிர் போகுமாறு
இச்சிச்சென் — இச்சு இச்சுஎன (ஒலிக்குறிப்பு)
இயவம் — இசைக்கருவி
இருப்பை — இலுப்பை
இறும்பூது — வியப்பார்ந்த மகிழ்ச்சி
ஈகம் — தந்நலமற்ற கொடை (தியாகம்)
ஈட்டம் — செல்வம்
ஈட்டுக்கு — அடமானமாக
ஈட்டுதல் — தேடித்தொகுத்தல்
ஈருயிர்க்காரி — பிள்ளைத்தாய்ச்சி
உகிர் — விரன்முனை (நகம்)
உணா — உணவு
உவந்து — மகிழ்ந்து
உளி — வெட்டு கருவி
ஊடாடுதல் — இடையே புகுந்து திரிதல்
ஊடே — இடையே
ஊண் — உணவு
ஊத்தை — அழுக்கு இழிந்தது.

ஊன் — புலால் : தசை
எகினம் — ஓதிமம் (அன்னப் பறவை)
எக்களித்து — பெருமகிழ்ச்சி கொண்டு
எத்து — வஞ்சகம்
எரி — நெருப்பு
என்பு — எலும்பு
ஏகாலி — துணிவெளுப்பவர்
ஏதவுரை — துன்ப உரை
ஏந்துகள் — ஏற்பான அமைப்புகள் (வசதிகள்)
ஏமநெறி — பாதுகாப்பான வழி
ஏய்ந்த — பொருந்திய
ஏலவில்லை — இயலவில்லை
ஏலாத — பொருந்தாத
ஏறெடுத்து — நிமிர்ந்து
கங்குல் — இரவு
கடைத்தலை — தலைவாயில்
கல் — வழித்தொலைவு (நீட்டளவை)
கவளம் — ஒருவாய்ச் சோறு
களிறு — ஆண் யானை
கற்கடின — கல்போலும் கடினமான
கனகனக்க — மிகவும் கனமாக
கன்னம் — துளை
காணி — விளைநிலம்
காலும் — வெளிப்படுத்தும்
கால்வாங்க — அடியெடுக்க
காவு — கொலையுணவு (பலி)
கிஞ்சித்தும் — சிறிதளவும்
கிளந்தது — கூறியது

குக்கி — குமுறி
குமிழ் — திமில் : காளையின் முதுகுக் [கொண்டை
குமைந்து — மனம் வருந்தி
கூளை — குட்டையான
கூற்றின் — காலனைப் போன்ற
கூன் — கூனல் : வளைந்த முதுகு
கொண்டையம்— உச்சி
சள்ளை — தொந்தரவு
சவர்க்காரம் — வழலை
சவசவக்கும் — சோர்வால் தளர்ச்சியுறும்
சிந்தாத — உறுதி குலையாத
சிலைவாங்கும்— ஒலிக்கும் : எதிரொலிக்கும்
சிவ்வென்று — புத்துணர்ச்சியுடன்
சீர்த்தி — மிகுபுகழ்
சூலி — கருவுற்றவள்
செப்பின — கூறின
சொரிந்தது — உகுத்தது : பொல பொலவெனக் [கொட்டியது
சோரா — கெடாத
தண்டம் — தண்டனை
தவ்வை — தாய்
திமில் — மாட்டின் முதுகிலுள்ள குமிழ்
திறம்பி — மாறுபட்டு
தீர — முழுவதும்
துஞ்சும் — தூங்கும்
துண்துளி — சிறுதுளி
துருப்பார் — திணிப்பார்

துள்ள — மேம்பட : அதிகமாக
துன்னத்
துரும்பும் — ஊசி போன்ற சிறு துரும்பும்
தொய்முதுகு — வளைந்த முதுகு
தோது — பொருத்தம் : வாய்ப்பு
நச்சுபவர் — விரும்புவோர்
நயன்மை — நேர்மை (நீதி)
நற்பேறு
மேவிடுங்கள் — நற்பயனை யடையுங்கள்
நாக்கடிப்பாக — வாய் முழக்கமாக
[நாவாகிய குச்சியால் வாயாகிய பறையில் அறைதல் : கடிப்பு —முரசறையுங்குச்சி]
நுணாக்கடியில் — நுணா மரத்தின் கீழ்
நேய — அன்பான
நொய்ய — நலிவுற்ற
நொள்ளை — குருடு
பங்கறை — அழகின்மை
பஞ்சை — வறிய : ஏழைமையான
படுத்திருக்கேன் — படுத்திரேன் : படுத்திருக்க [மாட்டேன்
பந்தம் — தீப்பநதம்
பரிந்து — அன்போடு
பாரி — பருத்த
பாவை — பெண்
பாழ்வெளி — வெற்றுவெளி
பாளை — இளமை
பிடரி — புறங்கழுத்து

பீடுற்ற — பெருமிதமான
பீழை — துன்பம்
பீற்றல் — கிழிசல்
புகலரிய — சொல்லவியலாத
புதைகாடு — இடுகாடு
புலர்ந்து — விடிந்து
புலனின்றி — விளங்காமல்
புழுக்கம் — மனக்குமைச்சல்
புழை — பொந்து (குகை)
புளகம் — மகிழ்ச்சி
புள் — பறவை
புறவு — புறா
புனல் — நீர்
புனைவு — ஒப்பனை
பெட்புற — விரும்பத்தக்க
பெருங்களியர் — பெருங்குடிகாரர்
பேரணங்கு — அழகிற் சிறந்த பெண்
பொக்கு — பதர்
பொதி — மூட்டை
போக்கிரி — வாழும் வழியற்றவன்
போங்கு — போக்கு
மண்டிய — விலாப் புடைக்க உண்ட
மறம் — வீரம்
மா — விலங்கு
மாக்கள் — விலங்குகள்
மாண்ட — இறந்த
மாவரசன் — விலங்கரசன் (அரிமா)
மாந்தி — உட்கொண்டு

மாட்சி — பெருமை
முக்காலும் — எக்காலத்திலும்
மும்மைப்பொழுதும் — எப்போதும்
முன்றில் — வீட்டின் முற்பகுதி
மெத்த — மிகவும்
மேனி — உடம்பு
மொள்ளை — மடமையான
வந்திருக்காய் — வந்திராய் : வந்திருக்கமாட்டாய்
வறிய — சிறுமையான
வார்ப்படம் — உருக்கி வார்க்கப்பட்ட சிலை
விசித்து — தேம்பி
விண்டு — வெளிப்படுத்தி
விழுமியர் — உயர்ந்தோர்
விள்ளரிய — சொல்லவியலாத
வீம்புகின்ற — வீண்பெருமை கொள்ளும்
வெங்கதிர் — கதிரவன்
வெய்ய — துன்பமான
வெற்பாய் — மலையாக — மலைபோல
வேட்டெஃகம் — குண்டெறி : வெடித்துக் குண்டெறியும் படைக்கலம்.